# ஆலைக் கரும்பு

(கட்டுரைகள்)

கி. வா. ஜகந்நாதன்

அமுத நிலையம் லிமிடெட்
தேனாம்பேட்டை சென்னை-1

முதற் பதிப்பு: அக்டோபர், 1954
அமுதம்—86


விலை ரூ. 1—6—0

## பொருளடக்கம்



நாஷனல் ஆர்ட் பிரஸ்
தேனாம்பேட்டை, சென்னை-18

# முன்னுரை

தமிழ் இலக்கியத்தில் கடவுள் உணர்ச்சியை எடுத்து விட்டால் அது உயிரற்ற உடல் போலத்தான் இருக்கும். சங்க காலத்து நூல்களில் கடவுளைப்பற்றிய பாடல்கள் அளவிலே குறைந்து காணப்படலாம். ஆனால் கடவுள் உணர்ச்சி அக் காலத்துத் தமிழர்களிடம் குறைந்திருந்தது என்று சொல்லமுடியாது. சங்ககாலத்து இலக்கியங்கள் என்று பெயரிட்டு வழங்கும் நூல்கள் பதினெட்டே; பத்துப் பாட்டு, எட்டுத் தொகை என்பன. பதினெண் கீழ்க்கணக்கு வரிசையையும் சேர்த்தால் முப்பத்தாறு ஆகும். பல நூற்றாண்டுகளாக விளங்கியது சங்கம். அவ்வளவு காலத்தில் இந்த முப்பத்தாறு நூல்களே எழுந்தன என்று சொல்லலாமா? இப்போது கிடைப்பவை இவ்வளவுதான். இன்னும் எத்தனையோ நூல்கள், பலவகையான பனுவல்கள் நிச்சயமாக உண்டாகியிருக்கத்தான் வேண்டும். ஆதலின் இப்போது கிடைக்கும் சங்க நூல்களைக் கொண்டு கடவுளைப் பற்றிய இலக்கியங்கள் மிகுதியாக இல்லையென்று சொல்ல ஒண்ணாது.

இப்போது கிடைக்கும் நூல்களில் ஒவ்வொன்றினும் கடவுள் வாழ்த்து இருக்கிறது; திருக்கோயில், விழா, வழிபாடு ஆகியவற்றைப் பற்றிய செய்திகள் இடையிடையே வருகின்றன. அவை பழங்காலத் தமிழரின் கடவுளுணர்ச்சியைக் காட்டும் அடையாளங்கள்.

சங்க காலத்துக்குப் பின்னர் இன்றுவரை தோன்றியுள்ள இலக்கியங்களைத் தொகுத்துப் பார்த்தால் எல்லாம்

தெய்வத்திறம் பேசும் பனுவல்களாக இருப்பதைக் காணலாம். தமிழருடைய வாழ்வு தெய்விக வாழ்வாக வளர்ந்து வந்ததையே இந்த இலக்கியங்கள் காட்டுகின்றன. நாயன்மார்களும் ஆழ்வார்களும் தோன்ற வேண்டுமானால் அதற்கேற்ற பக்தியுரமுள்ள நிலமாகத்தானே தமிழ்நாடு இருந்திருக்க வேண்டும் ?

தமிழ்ப் பாடல்களிலே கடவுளின் புகழைப் பல வகையில் சொல்லும் உத்திகளைக் காணலாம். தனியாக வழங்கும் பாடல்களிலும், நூல்களிடையே உள்ள கவிகளிலும் புலவர் பெருமக்கள் தங்கள் கற்பனை வண்ணத்தால் மூர்த்திகளின் புகழை அழகாகக் கோலம் செய்திருக்கிறார்கள்.

அத்தகைய அழகிய பாடல்கள் சிலவற்றைச் சுவைத்துப்பார்த்த பிறகு, பிறரும் அந்த இன்பத்தை அடையட்டும் என்ற நினைவினாலே எழுதிய கட்டுரைகளே 'ஆலைக் கரும்பு' என்னும் இத்தொகுதியில் உள்ளவை. கணபதி, திருமால், உமாதேவியார், சிவபெருமான், கலைமகள், புத்தர் ஆகியவர்களைப் பற்றிய பாடல்களை இதில் காணலாம்.

21-10-54 **கி. வா. ஜகந்நாதன்**

# அலைக் கரும்பு

கண்ணினால் பார்க்கும் பார்வையோடு கருத்தும் இணையாவிட்டால் அந்தப் பார்வையினால் எவ்வகை உணர்ச்சியும் உண்டாவதில்லை. கருத்தோடு இணைந்து பார்க்கும் பார்வையிலும் அந்தக் கருத்து உடையவனது மனப் பாங்குக்கு ஏற்றபடி போக்கும் பயனும் அமைகின்றன. விகாரமான வேடம் புனைந்துவரும் கோமாளியைக் கண்டு நாம் சிரிக்கிறோம். ஆனால் அவனைக் கண்ட குழந்தை அஞ்சி ஓடி ஒளிகிறது. வானத்திலே பறக்கும் கருடனைக் கண்டால் நம் நாட்டில் இருக்கும் கிராமவாசிகள் கன்னத்தில் போட்டுக்கொள்கிறார்கள். அது திருமாலினுடைய வாகனம் என்ற நினைப்பினால்தான் அப்படிச் செய்கிறார்கள். கிறிஸ்தவ நண்பரோ, முஸ்லிம் சகோதரரோ அப்படிச் செய்வதில்லை.

கலைஞன் உலக முழுவதையும் அழகு உருவமாகப் பார்க்கிறான். கள்ளிச் செடியிலே ஓர் அழகையும் அதன் முள்ளிலே ஓர் அழகையும் அதன் பூவிலே மற்றோர் அழகையும் பார்க்கிறான். கடற்கரைக்கு நாள்தோறும் போய்வரும் மக்கள் அங்கே வீசும் காற்று நன்றாக இருக்கிறது என்று சொல்லுகிறார்கள். ஆனால் எல்லையற்ற கடல் அலைகள் புரண்டு வரும் கோலத்தையும் சுருண்டு ஆலித்துப் பாயும் அழகையும் பார்ப்பதில்லை. அலைகளாகிய கைகளைக் கொட்டி முழங்குகிறது கடல் என்று பாரதியார் சொல்லுகிறார்.

"வெள்ளலைக் கைககளைக் கொட்டி
முழங்கும் கடலினை."

அவர் கண்ணுக்கு அப்படிப் பட்டது.



கவிஞருக்குக் கவிஞர், பக்தருக்குப் பக்தர் என்று சொல்லும் தகுதி வாய்ந்தவர் ஒருவர் இருந்தார். அவருக்குக் கவி குஞ்சரம் என்று பெயர். உணர்ச்சியுள்ள கவிகளைப் பாடும் பெருமான் அவர்.

ஒருநாள் மாலையில் வயற்காட்டுப் பக்கம் போய்க் காலாற நடந்துசென்று தென்றலை நுகர்ந்து வரலாம் என்று புறப்பட்டார். ஒரு கரும்புத் தோட்டத்தின் வழியே சென்றார். கரும்பு நன்றாக முற்றி விளைந்திருந்தது. வயசு முதிர்ந்தால் தலை நரைத்துவிடுகிறதல்லவா? கரும்பும் ஆயுசு முதிர்ந்தால் பூத்துவிடும். அதன் பூ அதன் வாழ்வுக்கு இறுதி கட்டியதை அறிவிக்கும் அடையாளம். கரும்பு முதிர்ந்துவிட்டமையால் அங்கே ஓரிடத்தில் ஆலையமைத்துக் கரும்பைப் பிழிந்து கருப்பஞ்சாற்றைக் காய்ச்சி வெல்லம் உண்டாக்கினார்கள். கவிஞர் கரும்புத் தோட்டத்தைப் பார்த்துக்கொண்டே வந்தவர், ஆலைக்கும் வந்தார். கொப்பரையிலே கருப்பஞ்சாற்றைக் காய்ச்சிக்கொண்டிருந்த காட்சியைப் பார்த்தார். அந்த இட முழுதும் வெல்லப் பாகின் மணம் நிரம்பியதாக இருந்தது. பிறகு ஆலையடிக்கும் இடத்துக்குப் போனார். கரும்பைச் சக்கை வேறு சாறு வேறாக அந்த ஆலை பிழிந்துகொண்டிருந்தது. மாடுகள் ஆலையைச் சுற்றி ஆலைத் தண்டை இழுத்துச் செல்ல, ஒருவர் கரும்பை ஆலையினிடையே கொடுக்க, அதிலிருந்து கடகடவென்று கருப்பஞ்சாறு வந்து கீழுள்ள பாத்திரத்தில் விழுந்துகொண்டிருந்தது. கவிஞர் எல்லாவற்றையும் பார்த்தார். கரும்பை ஆலையிலே கொடுத்த பிறகு அது உருளைகளினிடையே சென்று நசுங்கித் தன் உருவம் வேறு

பட்டுச் சக்கை சக்கையாக மறுபுறம் வெளிவருவதைக் கூர்ந்து கவனித்தார். கரும்பின் இன்சுவையையோ, கருப்பஞ்சாற்றின் இனிமையையோ, வெல்லப்பாகையோ அவர் அப்போது எண்ணிப் பார்க்கவில்லை. கரும்பு இரும்பு உருளைகளின் ஊடே புகுந்து நசுங்கிச் சக்கையாக விழுவதில்தான் அவர் கண்ணும் கருத்தும் ஊன்றின. அதைப் பார்க்கப் பார்க்க அவர் மனத்தில் ஏதோ குழப்பமான உணர்ச்சி தான் உண்டாயிற்று. கொலையாளியின் கையில் அகப்பட்டவர்கள் படும் வேதனையைப்போல அந்தக் கரும்பு வேதனைப்படுவதாக எண்ணினர். கரும்பும் ஓரறிவுயிர் தானே? அதற்கு வாய் இல்லை; அறிவு இல்லை; உணர்ச்சி இல்லை. ஆனல் மனிதன் அம்மாதிரி உருளையினிடையே அகப்பட்டுக்கொண்டால்—? இதை நினைக்கும்போதே கவிஞருக்கு உடம்பு நடுங்கியது. ஆலையிலிருந்து வரும் கருப்பஞ்சாறு இரத்தமாக அவருக்குத் தோன்றியது. கண்ணை மூடிக்கொண்டு சிறிது நேரங்கழித்துத் திறந்தார். இன்னும் அவருக்கு அந்தப் பயங்கரமான கற்பனை மாறவில்லை. மறுபடியும் கண்ணை மூடிக்கொண்டு சிந்தனையில் ஆழ்ந்தார்.

மனிதனுடைய உடல் நசுங்குவதை அவர் கற்பனை செய்து பார்த்ததோடு நிற்கவில்லை. மரண காலத்தில் அவனுக்கு எவ்வகை உணர்ச்சி இருக்கும் என்று சிந்தித்தார். எல்லோருமே மரணமடையும்போது எப்படி வேதனைப்படுவார்கள் என்று அடுத்தபடி சிந்தனை தாவியது. எல்லா உயிர்களும் உடலை விடும் இறுதிக் காலத்தில் வேதனைப்படும் என்பதில் சந்தேகமே இல்லை. மரண வேதனையைத் தானே எல்லோரும் பெரிய வேதனையாகச் சொல்கிறார்கள்? யமன் வந்து தன் பாசத்தை வீசும்போது உயிர் படும் அவஸ்தையை எண்ணினல் குலை நடுங்குகிறது. இந்தக் கரும்பு இரும்பு உருளைகளினிடையே படும் அவஸ்தையை வாய்விட்டுச் சொல்வதில்லை. அப்படியே ஆறறிவு படைத்

தவனென்று பெருமை பேசும் மனிதன் கூட மரண காலத்திலே படும் வேதனையை வெளியிடுவதில்லை; வெளியிடும் ஆற்றல் அவனுக்கு அப்போது இருப்பதில்லை. எமன் பாசம் வீசும்போது மனிதனுடைய உடம்பு படும் வேதனை பார்க்கிறவர்களுக்கே சகிப்பதில்லையே!

யம பயமும் மரண வேதனையும் போன்ற சிந்தனைகளை அந்தக் கரும்பு ஆலை உண்டாக்கிவிட்டது.

அவர் மெல்ல நகர்ந்தார். வானத்தை அண்ணாந்து பார்த்தார். நீல வானத்தில் இளம்பிறை முளைத்திருந்தது. மற்ற நாட்களில் அந்த இளம்பிறையின் அழகை வெவ்வேறு வகையில் அநுபவித்தவர் அந்தக் கவிஞர். இப்போது ஆலைக் கரும்பு படும் அவஸ்தையைக் கண்டு, யம பாசத்தால் இழுக்கப்படும் மனிதனுடைய அவஸ்தையை நினைத்துக் கொண்டவராதலால் அந்தக் கற்பனைக்கு இனமான திசையில் அவர் மனம் ஓடியது. அந்த இளம் பிறையைக் கண்டு அகத்திப் பூவை அவர் நினைக்கவில்லை; யானைத் தந்தத்தை உவமையாக எண்ணவில்லை; விநாயகருடைய கொம்பையும் ஒப்பாகக் கருதவில்லை. அவருக்கு யமனுடைய கோரப் பல்லே நினைவுக்கு வந்தது. இருளினிடையே முளைத்த இளம் பிறை கரிய உடலையுடைய நமனுடைய கடைவாயின் கோரப் பல்லாகவே தோன்றியது. சற்று முன் தான், நமன் வன் பாசம் வீச, உடலம் ஆலைக் கரும்புபோல வேதனைப்படுவதைக் கற்பனைக் காட்சியாலே கண்டுவந்தவராதலின், இப்போது அந்த நமனுடைய கோரப்பல்லை இளம்பிறையுருவிற் கண்டார். அவர் மரண பயம், மரண வேதனை, யமனுடைய கோரப் பல், யம பாசம் என்ற பயங்கரமான எண்ணங்களிடையே மனம் குழம்பி நின்றார்.



அப்போது ஒரு கருடன் பறந்து வேகமாகச் சென்றது. திருமாலின் வாகனமல்லவா அது? கருடனைக் கண்டவுடன்

அவருக்குக் கருடவாகனப் பிரானுடைய நினைவு வந்தது. கருடனைக் கையெடுத்துக் கும்பிட்டார். மரண பயமும் யம வாதனையும் உயிர்களுக்கு ஏற்பட்டாலும் அந்த வேதனை களிலிருந்து காப்பாற்றக் கருணைமூர்த்தியாகிய கருட வாகனன் இருக்கிறான் என்ற உணர்ச்சி வந்தது. இதற்கு முன் இருந்த பயங்கரமான கற்பனை மாறி இனிய கற்பனை எழுந்தது. புள்ளரசின்மேல் எழுந்தருளும் கருணைக்கடலைச் சிந்தித்தார்.

அவனும் கருநிறமுடையவன்தான்; சமுத்திரத்தைப் போன்ற நிறம். கருணையிலும் அவன் கடலைப்போன்ற வன். கடலைப்போலப் புலவும் உவர்ப்பும் உள்ளவன் அல்ல; புனிதமானவன். அவனுடைய கருணையை என்ன வென்று சொல்வது!

இந்திராதி தேவர்களுக்கெல்லாம் தலைவன் அவன். அவர்களுக்கெல்லாம் அமுதம் கடைந்து அளித்தவன். அவர்கள் யாவரும் தங்கள் ஆற்றலால் அமுதத்தைக் கடைந்துவிடலாம் என்று நினைத்து ஆரம்பித்தார்கள். குழந்தைகளின் விளையாட்டைக் கண்டு களிக்கும் தாய்போல அவன் அதைப் பார்த்துக்கொண்டிருந்தான். குழந்தைகள் முடியாமல் களைப்படையும்போது ஒரு கை கொடுக்கும் தாயைப்போல அமரர்கள் தவிக்கும்போது ஒரு கைகொடுத் தான். அமுதம் எழுந்தது. அதற்குத்தான் என்ன போட்டி! அசுரர்கள் ஆரவாரத்தோடு போட்டியிட்டனர். இறைவன் அவர்களுக்குப் போக்குக் காட்டி இந்திராதி தேவர்களுக்கு அமுதமாகிய விருந்தை அளித்தவன்.

அவ்வளவு சிறந்த வள்ளல்,ஓரிடத்துக்கு விருந்துண்ண வந்தான். ஒரு குடிசையில் விதுரன் அளித்த விருந்தை அருந்த வந்தான். 'இந்திரன் முதலியவர்களுக்கு அமுத விருந்தை அளித்தோமே; நாம் இங்கே வந்து உண்ண வாவது!' என்று எண்ணவில்லை. விதுரனுடைய

அன்பு ஒன்றையே கருதி அவனுடைய பர்ணசாலைக்கு வந்து விருந்து உணவுகொண்டான். அவனுடைய எளிமைக்கும் கருணைக்கும் ஈடு ஏது?

பயங்கரச் சூழலிருந்து கவிஞருடைய உள்ளமென்னும் பறவை சிறகடித்துப் பறந்து கருடவாகனனுடைய திருமேனி எழிலிலும் இணையற்ற ஆற்றலிலும் கரையற்ற கருணையிலும் உலாவியது.

*

கவிஞராதலின் அவருடைய கற்பனை கவி உருப் பெற்றது. இந்த இருவகை நிலையையும் இணைத்து ஒரு துதிக் கவியைப் பாடிவிட்டார்.

மாலைக்கு அரும்புபிறை புரைவாள்
எயிற்றுநமன் வன்பாசம் வீசஉடலம்
ஆலைக் கரும்புபடும் முன்னேகண்
முன்னேபுள் அரசோடும் வந்துஉதவுவாய்;
வேலைக் கரும்புனித, இந்திராதி யர்க்குநல்
விருந்திட்டு வந்துவிதுரன்
சாலைக்கு அரும்புது விருந்தாம்
மருந்தே தடஞ்சோலை மலைஅழகனே.

[மாலையிலே முளைக்கும் பிறையைப் போன்று ஒளிவீசும் கோரப் பல்லையுடைய யமன் வலிய பாசத்தை வீச, உடம்பானது ஆலையிலே உள்ள கரும்பு படும் வேதனையைப் படுவதற்கு முன்னே என் கண்முன்னாலே கருடவாகனத்தோடு எழுந்தருளி வந்து எனக்கு அருட்செல்வத்தை உதவ வேண்டும்; சமுத்திரம் போன்ற கரிய நிறம் பெற்ற புனிதனே! இந்திரன் முதலிய தேவர்களுக்கு அமுதமாகிய நல்ல விருந்தை வழங்கி, அப்பால் விதுரன் சாலைக்கு வந்து பிறருக்குக் கிடைக்காத அரிய புதிய விருந்தினாகிய அமுதம் போன்றவனே! விசாலமான சோலைமலையிலுள்ள அழகனே!

மாலைக்கு - மாலையில். புரை - ஒத்த. வாள் - ஒளி. எயிறு - பல். புள் அரசு - கருடன். வேலை - கடலைப்போன்ற. மருந்து - அமுதம்.]

இந்த அரிய பாட்டு அழகர் கலம்பகத்தில் உள்ளது.

# ஒளி வளர் காடு

அடர்ந்த காட்டில் கொடிய விலங்குகள் வாழும். நாட்டில் உள்ள விலங்குகள் மனிதனுடைய ஆணைக்கு அடங்கி ஏவல் புரியும். காட்டு விலங்குகளோ தம்முடைய மனம்போன போக்கிலே உழன்று உலவி உண்டு உறங்கும் வாழ்க்கையை உடையன. மனிதர்களைக் கண்டால் துன்புறுத்தும் இயல்பைப் பெற்றவை அவை. காட்டு வழியிலே செல்வதற்கு மக்கள் அஞ்சுவர். வேட்டையாடும் வல்லமை உடையவர்கள் அஞ்சுவதில்லை.

ஒரு காட்டில் மதம் பிடித்த யானைகள் இருந்தன. கடும் புலிகள் வாழ்ந்தன. நஞ்சைக் கக்கும் பாம்புகள் ஓடின. நரிகளும் ஓநாய்களும் திரிந்தன. மரத்தின் மேல் குரங்குகள் பாய்ந்தன. கரடிகளுக்கும் குறைவில்லை. மரங்களும் சிறு சிறு குன்றுகளும் அடர்ந்து செறிந்திருந்தமையால் அந்தக் காட்டுக்குள் வழி கண்டுபிடித்துப் போவது மிகவும் அரிதாயிருந்தது. வழி என்று ஒன்று இருந்தால்தானே, கண்டுபிடிப்பதற்கு? மனிதனுடைய காலே படாத கன்னிக்காடு அது. உள்ளே கதிரவன் கதிர் புக இயலாது; அத்தனை செறிவு. பகலிலும் இரவிலும் ஒரே இருள் மண்டிக் கிடந்தது. புறத்தே செங்கதிரோன் கதிர் எங்கும் பரவி ஒளிவிடும்; ஆனால் அந்தக் காட்டினிடையே அப்போதும் இருளே தேங்கி நிற்கும்.

ஒளி புகும் காடானால் இரவிலேதான் விலங்குகள் விளையாடும். ஆனால் இந்தக் காட்டிலோ அறுபது நாழிகையும் இரவுதான். ஆகையால் விலங்குகளின் கோர தாண்டவத்தை எப்போதுமே அங்கே காணலாம்.

இத்தகைய காடு எங்கே இருக்கிறது? ஒவ்வொருவரிடமும் இருக்கிறது. நெஞ்சமென்னும் இருளடர்ந்த காட்டில் ஆசை, ஆணவம், பொறாமை, கோபம், பகை, லோபம், பிறருக்குத் தீங்கு எண்ணும் நினைவு முதலிய பல விலங்குகள் திரிகின்றன. அறியாமையென்ற இருள் மண்டிக் கிடக்கிறது. ஆங்காரம் என்னும் மத யானையின் அட்டகாசம் சொல்லி முடியாது.

வேடர்கள் வன விலங்குகளைப் பிடிக்கவேண்டுமானால் கையில் தீப்பந்தங்களைக் கொண்டு செல்வார்கள். வெளிச்சத்தைக் கண்டால் அவை அஞ்சும். ஒளிக்கும் வன விலங்குகளுக்கும் பகை; இருளுக்கும் காட்டு விலங்குகளுக்கும் நட்பு. இருள் நிரம்பிய காட்டு ராஜ்யத்தில் ஒளி பரவினால் விலங்குகளின் ஆரவாரம் அழியும். காடு சோலையாகிவிடும். அதற்கு வழி உண்டா?



கரிய உடம்பு படைத்த மத யானை காரிருள் செறிந்த காட்டிலே பிளிறுகிறது. மத யானைகள் பல வளரும் காடாகிய மனம் இருள் செறிந்திருக்கிறது. இது காடாக இருப்பது கண்டு மக்கள் அஞ்சுவார்கள்; ஆனால் யானை அஞ்சுமா? ஒரு களிறு இந்தக் காட்டுக்குள்ளே புகுந்தது. முன்பே பல களிறுகள் வாழும் காட்டில் பின்னும் ஒன்று புகுந்தால் அந்தக் காட்டின் கடுமை மிகுமே ஒழியக் குறையாது என்று தோன்றுகிறது அல்லவா? இந்தக் களிறு அத்தகையது அன்று. தன் காற்பட்டதையும் கைப்பட்டதையும் நசுக்கித் துன்புறுத்தி அழிப்பது காட்டு யானை. இந்த யானையோ தன் காற்பட்டதைக் கையால் எடுத்துத் துன்பம் போக்கி இன்பம் தருவது. இந்தக் களிற்றின் திருக்கோலமே அழகியது.

காட்டுக் களிற்றுக்குத் தும்பிக்கை என்ற ஓர் உறுப்பு இருக்கிறது. அதைக் கை என்று சொல்கிறோம். கை

என்றால் கொடுக்கவேண்டும். தும்பிக்கையால் யானை வாங்கிக்கொள்கிறதே ஒழியக் கொடுக்கிறது இல்லை. இந்தக் களிறோ ஐந்து கைகளை உடையது. தன்னைச் சேர்ந்தவர்களுக்கு வேண்டிய பொருள்களையெல்லாம் வழங்குவதற்கு அமைந்த திருக்கரங்கள் அவை. நான்கு கரங்கள் நம் கைகளைப் போன்றவை. ஒன்று தும்பிக் கை; முகத்திலிருந்து நீண்ட துதிக்கை.

இந்தத் தெய்வக் களிறு, மற்றத் தேவர்களெல்லாம் நான்கு கரங்கள் படைத்திருக்க, தான் மாத்திரம் தனியே நீண்ட துதிக்கை ஒன்றையும் படைத்திருக்கிறது. இந்தக் களிறு அன்பர்களின் மனமாகிய காட்டிலே வந்து விளையாடத் திருவுள்ளம் கொள்கிறது. "பாழும் ஆங்காரமென்னும் மதயானை உலாவும் காடாயிற்றே!" என்று நாம் பயப்படுகிறோம். ஆனால் இந்த யானை பயப்படுமா? "நமக்கு ஏற்ற இடம் காடுதானே? தேவ லோகத்தில் உள்ள கற்பகக் காட்டில் உலாவலாம்; ஆனால் அது நமக்கு வேண்டாம். பூவுலகத்தில் பல அரணியங்கள் உண்டு; அவற்றிலும் நம்முடைய நாட்டம் செல்லவில்லை. கற்பகக் காட்டில் தேவர்கள் சுகமாக வாழ்கிறார்கள். அங்கே நமக்கு வேலை இல்லை. பூவுலகக் காட்டில் வேடர்களும் மற்றவர்களும் புகுந்து வனவிலங்குகளை அழிக்கிறார்கள். அங்கும் நமக்கு வேலை இல்லை. வேறுயாரும் புகுவதற்கு அஞ்சும் நம்முடைய அன்பர்களின் உள்ளமாகிய காடுதான் நமக்கு ஏற்ற இடம். அங்கே நாம் போனால் அங்குள்ள விலங்குகள் யாவும் இருக்கும் இடம் தெரியாமல் ஓடிவிடும்" என்ற அருளுள்ளத்தோடு இந்தக் களிறு வருகிறது.

அன்பருடைய நெஞ்சமாகிய காட்டில் இப்போது தன் தோள்கள் நான்கோடு கை ஒன்றும் மிகுதியாகக் கொண்ட விநாயகக் களிறு விளையாடுகிறது; வளர்கிறது. என்ன ஆச்சரியம்! இப்போது நெஞ்சம் காடாகவே இருக்கிறது;

பெரிய காடென்றே சொல்லவேண்டும். ஆனால் இந்தக் காட்டில் வேறு விலங்குகள் இல்லையே! பசிய இலையும், நறுமணம் வீசும் மலர்களும், இனிய கனிகளும் எங்கு நோக்கினும் கண்களுக்குத் தென்படுகின்றன. இங்கேதான் இப்போது இருளே இல்லையே! இருள் செறிந்த காடா இது? ஒளிவளர் காடாகிவிட்டது. அதனால் மரமும் இலையும் மலரும் கனியும் தெளிவாகத் தெரிகின்றன.

இந்த நெஞ்சம், முன்பும் காடாகவே இருந்தது. ஒரு கையை மாத்திரம் உடைய யானைகள் வளரும் காடாக, இருள் வளரும் காடாக இருந்தது. இப்போதோ தன் தோள் நான்கோடு ஒரு கையையும் கூடப்பெற்ற கணபதிக் களிறு வளர்கிற காடு; ஒளிவளர் பெருங் காடு. எத்தகைய மாற்றம்!

> *தன்தோள் நான்கின் ஒன்றுகைம் மிகூஉம்*
> *களிறுவளர் பெருங்காடு ஆயினும்*
> *ஒளிபெரிது சிறந்தன்று அளியஎன் நெஞ்சே!*

[தன்னுடைய திருத்தோள்கள் நான்கினோடு ஒரு கையை மிகுதியாகப் பெற்ற களிறு வளர்கின்ற பெரிய காடானாலும், ஒளி மிகுதியாகச் சிறந்து விளங்குவது, இரங்குதற்குரிய என் நெஞ்சு.

இதற்கு முன் இரங்தும் நிலையில் இருந்ததை நினைந்து, 'அளிய என் நெஞ்சு' என்றார்; அளிய—இரங்கத்தக்க.]



தமிழ் நூல்களில் பழமையாகக் காணப்படும் துதிகளுள் விநாயகரைப் பற்றிய செய்யுட்கள் மிகவும் குறைவு. ஆனாலும் கபிலதேவ நாயனார், பரண தேவ நாயனார், நம்பியாண்டார் நம்பி முதலிய புலவர்கள் பாடிய சில பிரபந்தங்கள் பதினோராந் திருமுறையில் உள்ளன. சில பாடல்கள் கர்ண பரம்பரையாக வருகின்றன. அவற்றின் நடையைப் பார்த்தாலே அவை பழைய பாடல்கள் என்று தெரியவரும். பழங்காலந்தொட்டு வழங்கி வரும் பாடல்களில் இதுவும் ஒன்று. இதனை இயற்றிய புலவர் இன்னாரென்று தெரியவில்லை.

# அம்பிகையின் திருமஞ்சனம்

உலகமெல்லாம் தன் திருவுருவாகப் படைத்த பெருமாட்டியாகிய பராசக்தி தன்னுடைய சிங்காதனத்தில் வீற்றிருந்தாள். மகிடாசுரனையும் பண்டாசுரன் முதலியவர்களையும் அழித்துத் தேவர்களுக்கு இன்பம் நல்கிய பெருமிதமும் கருணையும் பொங்க அம்பிகை புன்முறுவல் பூத்த திருமுகத்தோடு அமர்ந்திருந்தாள். இந்திராதி தேவர்களெல்லாம் அப் பெருமாட்டியின் திருவருள் இல்லாவிட்டால் தாங்கள் இருந்த இடம் புல் முளைத்துப் போயிருக்கும் என்பதை உணர்ந்து பராசக்தியைப் பாராட்டிக்கொண்டே இருக்கிறார்கள். அன்னையினுடைய அருட்பார்வை பெற்றுக் காலனையும் வென்ற முனி புங்கவர்கள் அப் பெருமாட்டியின் பெருங் கருணைத் திறத்தை நினைந்து நினைந்து உருகிப் புளகம் போர்த்து ஆனந்தக் கூத்தாடுகிறார்கள்.

பூவுலகில் லோகமாதாவின் மந்திரங்களை ஜபம் செய்தும் திருவுருவத்தைத் தியானித்தும் ஸ்ரீசக்ரத்தில் அம்பிகையை மேவச் செய்து பூசித்தும் அபிடேக ஆராதனை செய்தும் அன்பர்கள் வழிபடுகிறார்கள். ஆருயிர்களையெல்லாம் குழந்தைகளாகப் படைத்த அன்னை தேவரும் முனிவரும் மனிதரும் இவ்வாறு பாராட்டியும் போற்றியும் வழிபட்டு வருவதைக் கண்டு மகிழ்ந்து வீற்றிருக்கிறாள்.

இந்திரலோகத்தில் திடீரென்று அமரர் அரசனுக்கு ஒரு நினைவு உண்டாயிற்று. 'நம்முடைய அன்னைக்குத் தேவர்களெல்லாம் சேர்ந்து ஒரு பெரிய ஆராதனையை நடத்தவேண்டும்' என்ற விருப்பம் எழுந்தது. அம்பிகையின்

பெருமைக்கும் தம்முடைய பதவிக்கும் ஏற்றபடி அந்தப் பூசை மிக மிகச் சிறப்பாக அமையவேண்டுமென்று எண்ணினான். உடனே தேவர்களையெல்லாம் அழைத்துத் தன் கருத்தை வெளியிட்டான். அம்பிகைக்கு அபிடேகஞ் செய்யவேண்டிய திரவியங்களும் அர்ச்சனைக்கு வேண்டிய மலர்களும் நிவேதனத்துக்கு வேண்டிய உணவு வகைகளும் மிக விரிந்த வகையில் ஏற்பாடு செய்யவேண்டும் என்று சொன்னான். "இதுகாறும் யாரும் செய்தறியாத மகா பூசையாக அது இருக்கவேண்டும். தேவமன்னன் செய்த பூசையைப் போல நம்மால் செய்ய முடியுமா என்று பூலோகவாசிகளும், காட்டுவாசிகளாகிய முனிவர்களும் எண்ணி ஏங்கவேண்டும். என்ன? வருணா, சொல்வது தெரிகிறதா?" என்று கர்ஜனையோடு கேட்டான் இந்திரன்.

"மகாராஜா நினைத்தால் ஆகாத காரியம் என்ன இருக்கிறது? அபிடேகத்துக்கு வேண்டிய தீர்த்தங்களைக் கொண்டுவரும் பொறுப்பை அடியேன் ஏற்றுக்கொள்கிறேன். ஏழு கடல்களையும் வேண்டுமானால் கொண்டு வந்து விடுகிறேன். சர்வலோகங்களிலும் உள்ள நதிகளையும் அழைத்து வருகிறேன். எம்பிராட்டியின் திருமேனி குளிரத் திருமஞ்சனம் செய்வோம்" என்று வருணன் கூறினான்.

"உன்னுடைய செய்தி என்ன?" என்று வாயுவை நோக்கிக் கேட்டான் இந்திரன்.

"மணமுள்ள மலர்களையும் தூபத்துக்கு வேண்டிய பொருள்களையும் நான் கொண்டுவந்துவிடுகிறேன். ஒரு மலரை விட்டு வைக்காமல் எல்லாவற்றையும் பறித்து வந்து விடுகிறேன்" என்றான் வாயுதேவன்.

"பலவகை நிவேதனங்களைச் சித்தம் செய்து சமர்ப்பிக்கிறேன்" என்றான் அக்கினிதேவன்.

"வேண்டிய ஆடையாபரணங்களைத் தருகிறேன்" என்றது கற்பகம்.

"அபிடேகத்துக்கு வேண்டிய பாலைத் தருகிறேன்" என்றது காமதேனு.

இவ்வாறு ஒவ்வொருவரும் ஒவ்வொரு பொருளைத் தொகுத்துத் தருவதாக வாக்களித்தார்கள். அம்பிகையின் பூசை உலகங் கண்டறியாத பெருவிழாவாக இருக்கப் போகிறது என்ற நினைவினால் பூரித்தான் ஆயிரங் கண்ணன். இந்தப் பூசையைக் கண்டு அம்பிகையே பிரமிப்பை அடைந்து தன்னைப் பாராட்டுவாள் என்றுகூட எண்ணித் தனக்குள்ளே கிளுகிளுத்தான்.



இந்திரன் அம்பிகையின் திருச்சந்நிதானத்தை அடைந்தான். "தாயே, எங்களுடைய வாழ்வையெல்லாம் நிலை நிறுத்திப் பாதுகாக்கும் உன்னைப் பூசித்து வழிபடும் ஆசை எனக்கு உண்டாகியிருக்கிறது. பூவுலகத்திற்குச் சென்று அங்குள்ள ஆலயங்களில் உன்னை நான் வழிபட்டிருக்கிறேன். அதனால் எனக்குத் திருப்தி உண்டாகவில்லை. உன்னுடைய சொந்த இடத்திலே எங்கள் பெருமைக்கு ஏற்ற வகையிலே மிக மிகப் பெரிய பூசையாக நடத்த வேண்டுமென்று தீர்மானம் செய்திருக்கிறேன். திருவுள்ளச் சம்மதம் அருளவேண்டும்" என்றான். அம்மை சிறிது நேரம் பேசாமல் இருந்தாள். பிறகு புன்முறுவல் பூத்தாள்.

"என்னை அபிடேக ஆராதனைகள் செய்து வழிபடும் முறை மண்ணுலகத்துக்கு ஏற்றது. என்னுடைய விக்கிரகம் முதலியவற்றை அப்படிப் பக்தர்கள் பூசிக்கிறார்கள். சாட்சாத் என்னையே பூசிக்கவேண்டுமானால் அது உங்களால் முடிகிற காரியமா?" என்று கேட்டாள் தாய்.

"என்ன அப்படிச் சொல்லுகிறாய், தாயே? மனிதர்கள் சக்தி எங்கே, எங்களுடைய பேராற்றல் எங்கே? வருணன் வழங்கும் புனலில் மிகச் சிறிய அளவினால் அவர்கள் திருமஞ்சனம் ஆட்டுகிறார்கள். உலகத்தில் உள்ள மக்கள் அனைவரும் சேர்ந்து பூசை செய்தாலும் அது மிகவும் அற்ப அளவிலேதான் இருக்க முடியும். எங்கள் பூசை அப்படியா இருக்கும்? அதையும் அருள்கொண்டு பார்த்துவிட வேண்டும், தாயே!" என்றான்.

அன்னை சிரித்தாள். "அப்படியா! சரி, உன் இஷ்டப் படியே ஆகட்டும்" என்று தன் உடம்பாட்டைத் தெரிவித்துக்கொண்டாள்.

*

அன்று அமர லோகமே அல்லோல கல்லோலப் பட்டது. அசுரர்களிடமிருந்து விடுதலை பெற்று மீண்ட காலத்திலே கூட அத்தனை ஆரவாரம் இல்லை. தேவியின் மகா பூசைக்காகத்தான் அவ்வளவு முழக்கம், பரபரப்பு, வேகம், ஆட்டம், ஓட்டம் எல்லாம். இந்திரனுக்குத் தலைகால் புரியவில்லை. வாயுவுக்கோ கால் நிலை கொள்ளவில்லை. வருணன் எழும்பியும் குதித்தும் ஓடியும் துள்ளியும் தன் ஊக்கத்தை வெளிப்படுத்துகிறான். அக்கினி வேகத்தோடு சீறுகிறான்.

அம்பிகையின் பூசைக்குரிய திரவியங்கள் குவிந்தன, அதைப் பார்த்துப் பார்த்துப் பூரித்துப்போனான் இந்திரன். எல்லாம் அம்பிகையின் திருச் சந்நிதானத்தை அடைந்தன. பூசை ஆரம்பித்தது. வேதங்கள் கோஷித்தன. ஆகமங்கள் முழங்கின. கின்னரர் கீதம் பாடினர். வித்தியாதரர் வீணை வாசித்தனர். முனிபுங்கவர்கள் மந்திரங்களை உச்சரித்தனர். இந்திரனே தன் கையால் பூசை புரிந்தான். "இதோ இது ஆகாச கங்கை. இதோ இது பூலோக கங்கை. இதோ பாதாள கங்கை. இதோ பாற் கடல்"

என்று சொல்லிச் சொல்லி வருணன் அபிடேக நீரையும் பிற பொருள்களையும் எடுத்து எடுத்துத் தந்தான். திருமஞ்சனமாயிற்று. அமரமடந்தையர் உடனிருந்து அம்பிகையின் குறிப்பறிந்து பணி செய்தனர். இந்திராணி இந்திரனுக்கு அருகில் இருந்து வேண்டியதைச் செய்தாள்.

அபிடேகம் ஆயிற்று. அம்பிகையின் சேடிகளது உதவி கொண்டு இந்திராணி முதலியோர் அம்பிகையை அலங்கரித்தார்கள். பிறகு அர்ச்சனை தொடங்கியது. தூபதீப நைவேத்தியங்கள் ஆயின. வேத கானமும் பிற தோத்திரங்களும் நடைபெற்றன. தும்புரு நாரதர் யாழ் வாசித்தனர். அம்பிகையின் அந்தரங்க பக்தராகிய துர்வாச முனிவர் இவ்வளவையும் பார்த்துக்கொண்டு ஒரு தனியிடத்தில் இருந்தார். பூசை ஒருவாறு நிறைவெய்தியது. அம்பிகை யாவருக்கும் விடைகொடுத்து அனுப்பினாள். இந்திரன் உடம்பையே மறந்து ஆனந்தக் கடலில் ஆழ்ந்தான். தன் அரண்மனை சென்றான். "இத்தனை அற்புதமான பூசையை நம்மாலன்றி வேறு யாரால் செய்ய முடியும்?" என்ற செருக்கு அவன் உள்ளத்தில் மீதூர்ந்து நின்றது.

தனியே இருந்த துர்வாசர், அமரர் கூட்டம் எல்லாம் போனவுடன் அம்பிகையை அணுகி அவள் திருவடியில் விழுந்து எழுந்தார். அப் பெருமாட்டியின் திருமுக மண்டலத்தில் இயற்கையாக உள்ள நிலா முறுவலை அப்போது அவர் காணவில்லை. அத்தகைய நிலையில் அவர் அம்பிகையைத் தரிசித்ததே இல்லை. அவர் உள்ளத்தில் இன்னதென்று சொல்ல முடியாத வேதனை உண்டாயிற்று. "தாயே, இன்று நடந்த பூசையில் உன்னுடைய திருவுள்ளம் பேருவகையை அடைந்திருக்கவேண்டுமே! தேவர்களுக்கும் இந்த நல்ல காரியத்தைச் செய்ய அறிவு உண்டாயிற்றே! உன் திருவருளை என்னவென்று சொல்வேன்!" என்று பணிவாகச் சொன்னார்.

அம்பிகை உடனே பேசவில்லை. பெருமூச்சுவிட்டாள். "என்ன சொன்னாய்? பூசை என்று சொன்னாய்? அமர்க்கள மாக அல்லவோ இருந்தது? இங்கே பார்" என்றாள்.

துர்வாச முனிவர் பார்த்தார். அம்பிகையின் திரு மேனி கொப்புளம் கொப்புளமாக இருந்தது.

"இது என்ன?" என்று பதறித் துடிதுடித்துப் போனார் முனிவர்.

"இதுதான் அவர்கள் செய்த பூசையின் பயன்" என்றாள் அம்பிகை.

"சப்த சாகரங்களும் நதிதீர்த்தங்களும் கொண்டு அபிஷேகம் செய்தார்களே!"

"ஆம்! உண்மை. ஆனால் அவற்றைத் தம்முடைய அகங்காரத்திலே கொதிக்க வைத்து அபிஷேகம் செய் தார்கள். இது என்னால் சகிக்க முடியவில்லை. அக்கினியின் மத்தியிலே ஆனந்தக் கூத்தாடும் எனக்கு, அகங்காரத்தி னூடே ஒரு கணமும் இருக்க ஒண்ணாது. இந்திரன் செய்த அபிடேகத்தில் அவன் அகங்கார வெம்மைதான் இருந்தது. அதனால் என் தேகம் கன்றியது. அவன் வீசிய மலர்களில் அவனுடைய ஆணவத்தின் நாற்றம் அடித்தது. அவன் அணிவித்த ஆடையாபரணங்களில் அவனுடைய அகம் பாவம் இருந்து உறுத்தியது. ஐயோ! அவன் செய்த நிவே தனங்கள் அத்தனையும் ஒரே கசப்பு! அகந்தைச் சுவையில் ஊறிப்போன கசப்பு!"

துர்வாசர் கலங்கினார்; ஒன்றும் சொல்லத் தோன்றாது பிரமை பிடித்து நின்றார். அம்பிகையின் திருமேனியிலே கொப்புளங்களைக் கண்ட கண்களைக் குத்திக்கொள்ள வேண்டாமோ என்று விம்மினார். "அம்பிகே, இந்தக் கொப்புளங்கள் ஆற வழியில்லையா?" என்று அந்த விம்மலுக்கிடையே கேட்டார்.

"உண்டு, அது எனக்குக் கிடைக்கும். பொறு" என்றாள் மகாமாதா.



மாலையில் மீண்டும் அம்பிகையைத் தரிசிக்க வந்தார் துர்வாசர். உள்ளே புகுந்தார். அம்பிகை ஆனந்தமாக "ஹா ஹா"காரம் செய்தபடியே அசைந்து அசைந்து இன்பத்திலே மூழ்கியிருந்தாள். அவள் திருமேனி சுடர் விட்டு விளங்கியது. கொப்புளங்களைக் காணவில்லை. அந்த மேனியில் அங்கங்கே சிறு சிறு நீர்த்துளிகள். துர் வாசர் மெல்ல, "தாயே!" என்றார்.

"மருந்து கிடைத்துவிட்டது. ஓடு, உடனே பூலோகத் துக்கு ஓடு. அங்கே ஒரு சிறிய கோயிலில் என் சந்நிதிக்கு முன் ஒருவன் எனக்கு அபிடேகஞ் செய்கிறான். கையால் அல்ல; கண்ணால் செய்கிறான். போய்ப் பார். அதைப் பார்க்கும் பாக்கியம் வேறு யாருக்கும் இல்லை. உடனே போ" என்று கட்டளை பிறந்தது.

துர்வாசர் ஓடினார். சின்னஞ் சிறு கோயிலுக்குள்ளே சென்றார். அம்பிகையின் திருமுன்னர் யாரோ ஒரு பக்தன் கண்ணை மூடிக்கொண்டு அமர்ந்திருந்தான். அவன் கண்களில் நீர் தாரை தாரையாக வழிந்தது. "தாயே, கருணைக் கடலே, எங்கும் நிறைந்தவளே!" என்று அவன் சொல்கிறான். வார்த்தைகள் தழுதழுக்கின்றன. ஞானக் கண்ணைக் கொண்டு துர்வாச முனிவர் ஊடுருவிப் பார்த் தார். எலும்பும் தோலும், கந்தையாடையுமாக இருந்த அந்தப் பக்தனுடைய உள்ளத்தில் அம்பிகை ஆனந்தக் கூத்தாடிக் கொண்டிருந்தாள். அவன் கண்ணிலிருந்து நீர் ஊற்றெடுத்து மார்பிலே வழிந்தது. அதன் தண்மை உள்ளே பாய, அம்பிகை குதித்துக் கூத்தாடினாள்.

துர்வாசருக்கும் கண்ணில் நீர் வந்துவிட்டது. அன் பினால் உருகும் அந்தக் கந்தைத் திருக்கோலப் பெரியானைத்

தம்மை அறியாமலே வணங்கினர். மீண்டும் திருக்கைலாசம் சென்று அம்பிகையை அணுகினர். அவரால் ஒன்றும் பேசவே முடியவில்லை. ஆச்சரியத்தில் மூழ்கியிருந்தார்.

"பார்த்தாயா?" என்ற கேள்வி அன்னையின் திருவாக்கிலிருந்து எழுந்தது. துர்வாசர் பேச முயன்ருர். சிரமப்பட்டுத்தான் பேசினர்.

"மகா ஆச்சரியம்! அற்புதம்! ஆனந்தம்! உலகமெல்லாம் பரவிய பெரிய நதிகள் இருக்கின்றன. சப்த சாகரங்கள் இருக்கின்றன. அவற்ருல் உன் உலகங்கடந்த திருமேனியைத் திருமஞ்சனமாட்டினர்கள், இந்திராதி தேவர்கள். அதனல் உனக்கு எள்ளளவும் உகப்பில்லை; உன் திருமேனி வெதும்பியது. ஆனல்—என்ன ஆச்சரியம்! ஏழைத் தொழும்பர்கள் அன்பினல் உருகி விழிநீர் பெருக்கினல் அந்தக் கண்ணருவியிலே ஆனந்தமாக ஆடுகிருய். உன்னுடைய கருணைத் திறத்தை என்னவென்று சொல்வேன்! அந்த அன்பர்களின் பெருமையை யாரால் அளவிட முடியும்?" என்று அதிசயப் பெருக்கினலே அவர் பேசிக்கொண்டே போனர்.



இந்தக் காட்சியை அப்படியே காணவிட்டாலும், இக் காட்சிக்கு மூலமான கருத்தை ஒரு புலவர் அழகிய சிறு பாட்டொன்றில் வெளியிட்டிருக்கிருர். **பாசவதைப் பரணி** என்ற நூலில் வருகிறது அது.

> **என்! பாவும் ஆறுகடல் ஏழிருந்தும் என்அம்மை**
> **அன்பாளர் கண்அருவி ஆடுவது திருவுள்ளம்!**

**[என்ன ஆச்சரியம்! எங்கும் பரவிய ஆறுகளும் சப்தசாகரங்களும் தனக்குத் திருமஞ்சனத்துக்குரியனவாக இருந்துங்கூட, என் அன்னையாகிய பராசக்திக்கு, பக்தர்கள் அன்பினல் கசிந்து பெருக்கும் கண்ணீர் அருவியாலே திருமஞ்சனமாடுவதுதான் திருவுள்ளத்துக்கு உவப்பானது!]**

# அடியேன் விண்ணப்பம்

ஊரெல்லாம் திருட்டுப் பயம். திருட்டை நடத்து கிறவன் சாமான்யமான திருடன் அல்ல. பக்காத் திருடன்; பகல் கொள்ளைக்காரன். அவன் எந்தச் சமயத்தில் வருவான் என்று தெரியாது. ஊரில் உள்ளவர்கள் எல்லாம் மடியில் நெருப்பைக் கட்டிக்கொண்டு தவிக்கிறார்கள். எத்தனையோ நாளாகப் பாடுபட்டுத் தேடி நெடுங்காலம் இன்பம் அநுபவிக்கலாம் என்று ஊரில் வாழும் மக்கள் பொருளைச் சேமித்து வைத்திருக்கிறார்கள். உயர்ந்த சம்பா நெல்லைக் குதிரில் போட்டு வைத்திருக்கிறார்கள். புதிய பட்டும் துகிலும் வாங்கிப் பெட்டியில் வைத்திருக்கிறார்கள். மங்கையர்கள் நகை குலுங்கும் மரமாக நிற்கிறார்கள். அந்தப் படுபாவி வந்துவிட்டால் இந்த வாழ்வு அத்தனை யும் நாசமாகிவிடும்.

கள்ளனுடைய பயத்தைப் போக்க வழி தெரியாமல் திண்டாடுகிறார்கள், ஊரில் வாழும் மக்கள். அவன் அந்த ஊருக்கு வந்தான், இந்த ஊருக்கு வந்தான் என்ற செய்தி காதில் விழும்போதெல்லாம் அவர்களுடைய குலை நடுங்கு கிறது. ஏதோ ஓர் ஊரில் ஒரு பணக்காரனுக்கு அவன் ஓலை எழுதினானும். "நான் இன்ன வேளையில் வருவேன். உங்கள் பெட்டி பேழையில் உள்ளவைகளையெல்லாம் நீங்களே திறந்து எடுத்துச் சித்தமாக வைத்திருங்கள். நான் வந்து வாங்கிக்கொள்கிறேன். ஏதாவது சூழ்ச்சி செய்தீர்களோ தொலைந்துவிட்டீர்கள்! ஜாக்கிரதை!" என்று அவன் எழுதியிருந்தானும். என்ன துணிச்சல்! இவனை அடக்குவார் இல்லையா?

அந்த ஊர் நாட்டாண்மைக்காரர் புத்திசாலி. அவருக்கு எப்படியாவது இந்தத் திருடனை மடக்கவேண்டுமென்று ஆசை. அவன் வரும்போது எதிர்த்து நிற்பதில் பயன் ஒன்றும் இல்லை. அவனை எதிர்த்துப் போர் செய்ய அவரிடமும் சரி, அந்த ஊராரிடமும் சரி, எந்தவிதமான ஆயுதமும் இல்லை; வேறு வகையான பாதுகாப்பும் இல்லை. அவர் தம்முடைய ஊருக்குத் திருடன் வராமல் செய்ய உபாயம் உண்டா என்று யோசித்தார். பல அறிஞர்களை விசாரித்தார்.

யாரோ ஒரு பெரியவர் ஓர் உண்மையைச் சொன்னார். அந்தத் திருடன் பொல்லாதவனானாலும் அவனையும் அடக்கும் பெரியவன் ஒருவன் இருக்கிறான். அந்தப் பெரியவன் திருடன் அல்ல. பெரிய கொடையாளி. திருடனுக்கு வேண்டியவற்றைக் கொடுத்தவனும். அந்த வள்ளலுடைய சிநேகிதம் கிடைத்தால் இந்தத் திருடனுடைய தொல்லையினின்றும் விடுபடலாம் என்று பெரியவர் சொன்னார். அந்த வள்ளலுக்கு வேண்டியவன் என்று தெரிந்தால் அவனிடம் திருடன் வாலாட்டுவதே இல்லையாம்; வழியிலே கண்டாலும் கும்பிடுபோட்டுவிட்டுப் போகச் சொல்வானும்.

இதை நாட்டாண்மைக்காரர் முதலில் நம்பவில்லை. வல்லாளனுக்கும் ஒரு வல்லாளன் இருப்பது உலக இயல்பு என்று எண்ணியபோது, அப்படி ஒரு வள்ளல் இருப்பது உண்மையாக இருக்கலாம் என்று தோன்றியது. மேலும் விசாரித்தார். எடுத்த காரியத்தை முடிப்பதில் வல்லவராகிய அவர் எப்படியோ அந்த வள்ளலைக் கண்டுபிடித்து அவருடைய அன்புக்குப் பாத்திரரானார். இனிமேல் திருடனுடைய பயம் இராதென்று நினைத்துக்கொண்டிருந்தார்.

ஒரு நாள் அயலூரிலிருந்து பல மக்கள் இந்த ஊருக்கு ஓடிவந்தார்கள். அந்தத் திருடன் வந்து ஊரைக் கொள்ளையிடுகிருன் என்று சொல்லிப் புலம்பிஞர்கள் அவர்கள். இந்த ஊரில் உள்ளவர்களும் பயந்து நடுங்கிஞர்கள். "இனி நம்முடைய முறைபோலும்!" என்று அவர்கள் ஒவ்வொரு கணமும் திருடனை எதிர்பார்த்திருந்தார்கள்.

அப்போது அந்தத் திருடனிடமிருந்து ஓர் ஆள் வந்தான். ஊரின் நாட்டாண்மைக்காரருக்கு ஓலை ஒன்று கொண்டு வந்திருந்தான். "இனிச் சந்தேகம் ஏது? அவன் தான் வரப்போவதை முன்கூட்டியே தெரிவித்துவிட்டான்" என்று தீர்மானித்தனர் ஊரார். நாட்டாண்மைக்காரர் ஓலையைப் பிரித்தார். பிரிக்கும்போது அவர் கை நடுங்கியது. சுற்றி நின்றவர்கள் யாவரும் கவலை தோய்ந்த முகத்தோடு அந்த ஓலையில் என்ன எழுதியிருக்கிறது என்று அறிந்து கொள்ள ஆவலாய் இருந்தார்கள்.

நாட்டாண்மைக்காரர் முகத்தில் ஒளி பரவியது. சிறிது பெருமூச்சு விட்டார். "கள்வர் தலைவர் இந்த ஊருக்கு வரமாட்டாராம்" என்று சொன்ஞர். பக்கத்தில் நின்றவர்களுக்கு ஒன்றும் விளங்கவில்லை. அதஞல் நாட்டாண்மைக்காரர் அதை உரக்கப் படித்தார். "மகாராஜ ராஜ ஸ்ரீ நாட்டாண்மைக்காரர் அவர்களுக்கு அடியேன் தண்டனிட்டுச் செய்துகொள்ளும் விண்ணப்பம் என்னவென்ருல்"......கேட்கிறவர்கள் தங்கள் காதையே நம்பவில்லை. திருடர் தலைவஞ அப்படி எழுதுகிருன்!

"தங்கள் ஊருக்கு வந்து கொள்ளையடிக்கலாமென்று எண்ணியிருந்தேன். ஆஞல் தாங்கள் நம்முடைய எசமானருக்கு வேண்டியவர்களென்று தெரிந்ததும் அந்த யோசனையைக் கைவிட்டுவிட்டேன். தங்களுக்கு என்ஞல் ஏதாவது உதவி வேண்டுமாஞல் நான் நாய்போலக் காத்திருக்கிறேன்" என்று கடிதம் முடிந்திருந்தது.

அந்த ஊரார் பயம் நீங்கியது. நாட்டாண்மைக் காரரை வாழ்த்தினார்கள். அவரோ, "என்னை வாழ்த்துவது தகாது. இந்தப் பயத்தை நீக்கிய அந்த எசமானராகிய வள்ளலை வாழ்த்துங்கள்" என்றார்.

திருடர்களுடைய கதைகளில் இப்படி வழங்கும் வரலாறுகள் பலவற்றை நாம் கேட்டிருக்கிறோம். கொள்ளை அடிக்கிறவனாலும் சிலரிடம் பயன்படுவது உண்டு.

இப்போது வேறு ஒரு நிகழ்ச்சியைப் பார்க்கலாம்.



யமலோகம்: யமதர்மராஜன் தன்னுடைய சிங்காதனத்தில் வீற்றிருக்கிறான். அருகில் சித்திரகுப்தன் கணக்குச் சுருணையுடன் மிகவும் சுறுசுறுப்பாகக் கணக்கு எழுதிக்கொண்டிருக்கிறான். அன்று அன்று யார் யாருடைய உயிரைக் கொண்டுவரவேண்டும், எங்கெங்கே கொண்டு போகவேண்டும், என்ன என்ன தண்டனை தரவேண்டும் என்ற கணக்குகளைக் கவனித்துக் கொண்டிருக்கிறான். யமனுடைய ஏவலாளர்களில் தலைவர்கள் சிலர். காலன் என்பவன் ஒரு தலைவன். உயிரின் தகுதிக்கு ஏற்றபடி சில சமயங்களில் கால தூதர் போவார்கள். சில சமயங்களில் யமனுடைய அருகில் உள்ள தூதர்கள் போவார்கள். வேறு சில சமயங்களில் காலனும் போவான். யமராஜனே மிக மிகப் பெரிய உயிரானால் கொண்டுவரப் போவதுண்டு.

அன்றைக்குக் கால தூதர்கள் கொண்டு வரவேண்டிய உயிர்களின் பட்டியல்களைச் சித்திரகுப்தன் சித்தம் பண்ணினான். யாரோ ஒருவன் அன்று இறக்கவேண்டியவன். அவனிடம் ஒரு கால தூதுவனை அனுப்ப ஏற்பாடாகி இருந்தது. அவனுடைய புண்ணிய பாவக் கணக்கு எழுதிய ஓலையைத் தனியே எடுத்து வைத்திருந்தான் சித்திர குப்தன். மேற்கொண்டு காரியங்களை நடத்த வேண்டும் அல்லவா?

"வழக்கமாக அந்த மனிதனுக்கு ஏதாவது மரண அறிகுறியை உண்டாக்கியிருக்கிறீர்களா?" என்று யமன் விசாரித்தான்.

"அறிகுறி ஒன்றும் இல்லை. போகும்போது வழியில் இடறிவிட்டு உயிரைக் கொண்டுவர வேண்டியதுதான்" என்று குறிப்பிட்ட தூதுவன் பணிவோடு விடையளித்தான்.

"அவன் வெளியே எப்போது புறப்படவேண்டும்?"

"இதோ இன்னும் சில கணங்களில் புறப்பட வேண்டும்."

"அப்படியா? அவன் எந்த ஊரில் இருக்கிருன்?"

"மதுரை மாநகரில்" என்ருன் தூதுவன்.

யமதர்மனுக்கு மதுரை என்ற சொல்லைக் கேட்டவுடனே மனம் குழம்பியது.

"மதுரையை விட்டு வெளியூருக்குப் போகப் போகிருனு?" என்று அவசரமாகக் கேட்டான் வைவஸ்வதன்.

"இல்லை, வீட்டை விட்டு வெளியே வருவான். அப்போது......" என்று சித்திரகுப்தன் இப்போது பதில் கூறினுன். நேரமாய் விட்டபடியால் காலதூதன் அந்த மனிதன் உயிரைப் பிடிக்கப் போய்விட்டான்.

யமதர்மராஜனுக்கு என்ன காரணத்தாலோ பயம் தோன்றியது. தன் ஞானப் பார்வையை மதுரையின்மீது திருப்பினுன். அந்த மனிதன் வீட்டை விட்டுப் புறப்பட்டு விட்டான். காலதூதன் அவனைத் தொடர்ந்து செல்கிருன். உயிர் விடப்போகும் மனிதன் இப்போது கோயிலுக்குள் புகுந்தான். காலதூதன் வெளி வாசலிலே நின்று விட்டான். உள்ளே புகுவதற்கு அவனுக்கு அநுமதியில்லை. 'கோயிலுக்குள்ளே புகுந்த மனிதன் திரும்பி

வருவான். அப்போது அவன் உயிரை வாங்கலாம்' என்று காலதூதன் காத்திருந்தான். யமதர்ம ராஜன் இந்தக் காட்சிகளை எல்லாம் பார்த்துக் கொண்டேயிருந்தான். அந்த மனிதன் உயிர் இனி யமலோகத்துக்கு வரப்போவதில்லை என்று நிச்சயம் செய்துகொண்டான். அவன் கோயிலுக்குப் போவதைத் தெரிந்து கொள்ளாமல் காலதூதனை விட்டது அபசாரம் என்று எண்ணி வருத்தப் பட்டான்.

கோயிலுக்குப் போன மனிதன் நேரே மீனாட்சியம்மையின் சந்நிதானத்துக்குச் சென்றான். அம்பிகையின் முன் நின்றான், அந்தப் பெருமாட்டியின் திருக்கோல அழகிலே ஈடுபட்டான். உயிரோவியமாக நின்றாள் மீனாட்சி. காடு அடர்ந்தது போலச் செறிந்து இருண்ட கருங்கூந்தலைப் பக்தன் பார்த்தான். எல்லா உயிர்களுக்கும் பார்வையை அருளிக் கண்மணியைப் போல நின்ற அவள் அருளை நினைத்தான். தேன்போன்ற மொழியையும் கொவ்வைக் கனிபோன்ற இதழையும் உடைய திருவாயின் எழிலைக் கூர்ந்து நோக்கினான். தென்கூடலாகிய மதுரையில் அம்பிகை சின்னஞ் சிறு பெண்பிள்ளையாக எழுந்தருளிய பேரருளை எண்ணி எண்ணி உருகி மரம்போல் அப்படியே விழுந்து தண்டனிட்டான்.

அவனுடைய பக்தியையும் வழிபாட்டையும் அகப்பார்வையால் யமராஜன் பார்த்துக் கொண்டிருந்தான். "இந்தப் பக்தனைக் கொண்டு வரச்சொல்லிக் கால தூதனை அனுப்பினோமே!" என்று நடுங்கினான். பக்தன் அங்கே நிற்க நிற்க யமராஜனுக்கு இருப்புக் கொள்ளவில்லை. "இனி என்ன செய்வேன்!" என்று தடுமாறினான். பக்தன் மீனாட்சியம்மைக்கு முன் விழுந்து தண்டனிட்டானோ இல்லையோ, யமனும் மனத்தினாலே அந்தப் பக்தனுக்கு நமஸ்காரம் செய்தான். உடனே, சித்திரகுப்தனைக்கூட அழைக்க

வில்லை, தானே ஓலையையும் எழுத்தாணியையும் எடுத்து எழுதத் தொடங்கினான்.

“தேவரீர் பக்தசிரோமணி அவர்களுக்கு அடியேன் தண்டனிட்ட விண்ணப்பம். அடியேன் அறியாமையால் செய்த பிழை யெல்லாம் பொறுத்துக் கொண்டு இந்த ஏழையைக் காப்பாற்றவேண்டும்.................” இன்னும் என்னவெல்லாமோ எழுதி அனுப்பத் துணிந்தான்.

காரணம் என்ன?

காடு, “எனக்குள்ள செறிவும் மணமும் கருமையும் உன்னிடம் தொற்றுவிட்டன” என்று தண்டனிடும் கருங் குழலாளும், உலகமெல்லாம் காணும் கண்ணுக்கு ஒளி தந்து மணிபோல் நின்று அருள் பாலிக்கும் பெருமாட்டியும், தேன் போன்ற மொழியையும் கோவைப்பழம் போன்ற இதழையும் உடைய திருவாயைப் பெற்றவளும், தென் கூடலில் இளம் பெண்ணாக எழுந்தருளியவளும் ஆகிய மீனாட்சியை அந்த அன்பன் வணங்கியதுதான்.

இந்தக் காட்சிகளையெல்லாம் கற்பனையால் விரித்துக் காணும்படி செய்தது பின்வரும் பாடல்.

**கான்தெண்ட னிட்ட கருங்குழ லாளை,என்**
**கண்மணியைத்**
**தேன்தொண்டை வாய்ச்சியைத் தென்கூட லிற்சிறு**
**பெண்பிள்ளையை**
**யான்தெண்ட னிட்ட பொழுதே, இயமன்**
**எனக்கும், “அடி**
**யேன்தெண்ட னிட்டவிண் ணப்பம்” என்று ஓலை**
**எழுதுவனே.**

(தான் உவமையாகாமல் தோற்றதை உணர்ந்து காடானது வணங்கும் கரியகுழலை உடையவளை, தேன் போன்ற மொழியையும் கொவ்வைக் கனிபோன்ற உதட்

டையும் உடைய வாயை உடையவளை; தென்கூடலாகிய மதுரையில் எழுந்தருளிய மீனாட்சியம்மையாகிய சிறிய பெண்பிள்ளையை, யான் திருக்கோயிலுக்குள் சென்று தெண்டனிட்ட அந்தப் பொழுதிலே யமன், "தேவரீருக்கு அடியேன் தெண்டனிட்ட விண்ணப்பம்" என்று எனக்குப் பணிவாக ஓலை எழுதுவான்.)

மீனாட்சியை வணங்கினவர்களுக்கு யமபயம் இல்லை என்பது கருத்து. அந்தக் கருத்தை மிகவும் அற்புதமாக ஒரு நாடகக் காட்சியே நம் உள்ளத்தில் உருவாகும்படி யாகப் பாடி அளித்த புலவர் பலப்பட்டடைச் சொக்கநாதப் புலவர்.

# அரைக் கும்பிடு

தாயுமானவர் சிறந்த அநுபவ ஞானி; அவருடைய திருவாக்கில் உபநிஷத்துக்களில் கூறப்பெறும் உயர்ந்த உண்மைகள் மிக எளிய முறையில் தெளிவாக அமைந்திருக்கின்றன. மிகவும் நுட்பமான கருத்துக்களை அழகாகச் சொல்லுகிறார். வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலையையே அவர் விரும்புகிறவர்.

பார்க்குமிடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணப் பொருளின் தன்மையை உணர்ந்தவர் தாயுமானவர். விரும்பும் சரியை முதல் ஞானம் வரையில் உள்ள சோபானங்கள் அரும்பு, மலர், காய், கனிபோல் அமைந்தவை என்பது அவர் கருத்து. ஆதலின் அங்கைகொடு மலர் தூவி அங்கமது புளகிப்ப அன்பினுல் உருகிச் செய்யும் வழிபாட்டையும் அவர் விரும்புகிறார்.

ஒரு நாள் இறைவனை ஓர் உருவத்திலே வைத்து மலரால் அருச்சித்து வழிபடப் புகுந்தார். இறைவனுடைய திருவுருவத்தை எழுந்தருளப் பண்ணினர். பூசைக்குரிய பண்டங்களைத் தொகுக்கத் தொடங்கினர். நந்தவனத்துக்குச் சென்று மலர் கொய்யலாம் என்று எண்ணிப் போனர். ஒரு நந்தியாவட்டைச் செடிமுன்பு நின்றார். அதில் சுத்த சத்துவகுணத்தின் உருவம் போல வெள்ளை வெளேரென்ற மலர் மலர்ந்திருந்தது. அடுக்கடுக்காக இதழ்கள் இருந்தன. அந்த மலரைத் தாயுமானவர் கண்டார்.

முதலில் மலராகத்தான் கண்டார். பின்பு, அதனூடே அவருடைய கண்கள் சென்றன. அவருடைய

மனநிலை இப்போது வேறுபட்டது. பூவைப் பறிக்கப் புறப்பட்டபோது அவர் மனம் இருந்த நிலை வேறு. இப்போது அது உயர உயரப் பறந்து இறைவனுடைய அகண்டமான உருவத்தில் லயிக்கும் நிலைக்குச் சென்று கொண்டிருந்தது. மலரை ஒரு செடியில் இருக்கும் அழகிய பொருளாகக் கண்டவர், இப்போது ஆண்டவன் உறையும் இடமாகக் கண்டார். மலையிலும், மணலிலும், வானிலும், மண்ணிலும், கடலிலும், பனித்துளியிலும், சூரியனிலும், தீப்பொறியிலும், குகையிலும், வெளியிலும், மனிதன் உள்ளத்திலும், உலக முழுவதும் நிறைந்திருக்கும் இறைவன் அந்த அழகிய நந்தியாவட்ட மலரிலே காட்சி கொடுத்தான். மலர் தன் வெள்ளிதழ்களை விரித்து இவரைப் பார்த்துச் சிரித்தது.

"இந்த மலர் வேறு; நீ பூசை செய்யப் புகும் பொருள் வேறு என்று நினைக்கிறாய்? நீ பரம்பொருளின் வடிவம் என்று அழைத்துப் பாவிக்கின்ற பிம்பத்தில் எழுந்தருளி யிருப்பவனே என்னிடத்திலும் இருக்கிறானே! இது உனக்குத் தெரியவில்லையா? மனிதன் பீடமிட்டு அலங்கரித்துத் திருவுருவத்தை வைத்துப் போற்றுகிறான். அடுக்கடுக்கான இதழ்களும், தூய வெண்மை நிறமும், நறுமணமும், மென்மையும், தண்மையும், மலர்ச்சியும் உள்ள என்னைப் படைத்தவன் இறைவன். அவனுடைய வண்ணத் திருக்கையால் அழகு பெற்ற என்னிடம் அவன் மகிழ்ந்து உறைகிறானே; அதை நீ காணவில்லையா? என்னிடத்தில் உள்ள அழகான அடுக்கு என்ன என்று நினைக்கிறாய்? அவனுடைய அருளடுக்கு அல்லவா? என்பால் உள்ள மணமாக அவன் இருக்கிறான்; மென்மையாக இருக்கிறான்; தண்மையாக இருக்கிறான்; வெண்மையாக இருக்கிறான். என்னைப் பறித்துப் பூசை செய்வதைவிட, எனக்குள் இறைவன் உறைவதை, நானாகவே எழுந்தருளியிருப்பதைக் காண, உனக்குக் கண் இல்லையா?"

அந்த மலர் பேசியதா? அல்லது தாயுமானப் பெருந்தகை யாருடைய அறிவுதான் பேசியதா?—தெரியவில்லை. எப்படியோ மலர் கொய்ய வந்தவர் அந்த மலரிலே இறைவனைக் கண்டு நின்றுவிட்டார். அவருடைய உள்ளமான வண்டு,

"பண்ணேன் உனக்கு ஆன பூசை; ஒரு வடிவிலே
பாவித்து இறைஞ்ச ஆங்கே
பார்க்கின்ற மலரூடு நீயே இருத்தி; அப்
பனிமலர் எடுக்க மனமும்
நண்ணேன்"

என்று ரீங்காரம் செய்தது. பார்க்கின்ற மலரூடு இறைவன் இருப்பதைக் கண்டு இன்பத் தேனை மொண்டு மொண்டு உண்டது.



ஒரு வடிவிலே பாவித்து இறைஞ்சும் பூசை நின்றுவிட்டது. மலரூடு அவனைக் கண்டார். உடனே இறைஞ்ச வேண்டுமென்ற எண்ணம் வந்தது. மலரூடு நின்ற மகாதேவனுக்கு அஞ்சலி செய்ய வேண்டுமென்று எண்ணினார்; கைகளைக் குவித்துக் கும்பிட நினைத்தார். ஆனால் கைகள் எழவில்லை. முன்னே பூவைச் செடியிலிருந்து பறிக்காமல் நிற்கப் பண்ணியதற்குக் காரணமாக எந்த உணர்வு தலைப்பட்டதோ, அந்த உணர்வே பின்னும் முறுகி எழுந்து இப்போது கைகளைக் குவிப்பதையும் தடை செய்தது.

"இரண்டு கைகளையும் குவித்து இதோ மலர்ந்து விளங்கும் மலரூடே தோற்றும் இறைவனுக்குக் கும்பிடு போடலாமே!" என்றுதான் முதலில் ஓர் எண்ணம் எழுந்தது. ஆனால் கை எழவில்லை. உள்ளத்தில் வேறு ஒரு நினைவு தோன்றியது.

இறைவன் எதிரே இருந்த மலரில் மாத்திரமா இருக்கிறான்? திருவுருவமாக அமைத்த பிம்பத்தில் இருக்கும்

இறைவனே மலரிலும் இருக்கிறான் என்று உணர்ந்த உணர்விலே அடுத்தபடி, இருதய மலரிலும் ஈசன் இருக்கிறான் என்ற உண்மை தட்டுப்பட்டது. முன்னே உள்ள மலரிலும் அவன் மலர்கிறான்; மலரைக் கண்டு நிற்கும் மனிதனது உள்ள மலரிலும் அவன் நிற்கிறான். மலரிலே இருக்கும் பெருமானைக் கும்பிடக் கையெடுக்கிறோம். இரண்டு கைகளையும் குவிக்கும்போது அந்தக் கும்பிடு முன்னே நிற்கும் இறைவனுக்கு ஆகும். ஆனால் குவித்த கைகளுக்குப் பின்னும் இறைவன் நிற்கிறானே! முன்னே மலரில் மணமாயும் பின்னே இருதயத்தில் துடிப்பாகவும் நிற்கிறான் இறைவன். இரண்டு பக்கத்திலும் கூருள்ள ஈட்டியைப்போல, கும்பிடும்போது முன்னும் பின்னும் உள்ள இரண்டு உருவங்களுக்கும் அந்தக் கும்பிடு அமைவதானால் புறத்தே மலரில் தோன்றும் இறைவனுக்கும் அகத்தே இருதய புண்டரிகத்தில் நிற்கும் பரமனுக்கும் ஒருங்கே வணக்கம் செய்ததாக அமையும். நம்முடைய கைகள் அப்படி அமையவில்லையே! ஐந்து விரல்களும் வெவ்வேறு அமைப்போடு உள்ள கையால் கும்பிடும்போது சுண்டுவிரல் முன்னே நிற்கும்படி குவித்து வணங்குகிறோம். ஆகவே ஒரு பக்கந்தான் கும்பிடு தெரியும் கட்டைவிரல் நிற்கும் மற்றொரு பக்கம் கும்பிடும் செயலைக் காட்டவில்லை. முன்னும் பின்னும் உள்ள ஈசனை ஒரேசமயத்தில் கும்பிட்டால் அது முழுக் கும்பிடு ஆகும். முன் உள்ள தனை மாத்திரம் கும்பிட்டுப் பின்னுள்ள இருதய கமலவாசனைக் கும்பிடாமல் விட்டுவிட்டால் அது பாதிக் கும்பிடுதானே? முழுக் கும்பிடு போட நம்முடைய கையின் அமைப்பு இடங் கொடுக்கவில்லை. ஆதலின் மலரூடு இருக்கும் பெருமானைக் கும்பிட்டால் அது அரைக்கும்பிடு ஆகிறது.

தாயுமானவர் சிந்தனையில் இந்த நினைவோட்டம் ஓடியது. "மலரூடு நீ இருப்பதைக் கண்டேன்; உடனே கைகுவிக்க எண்ணினேன். 'கைகுவிக்க மனம் நாணியது.

ஏனெனில் அந்த உள்ளத்தினூடும் நீதானே இருக்கிறாய்? ஆதலின் நான் போடும் கும்பிடு எப்படி முழுக் கும்பிடு ஆகும்? அரைக் கும்பிடுதானே?'' இவ்வாறு அவர் பாடினார்.

'' நாணும்என் உளம் நிற்றிநீ
நான்கும்பி டும்போது அரைக்கும்பிடு ஆதலால்
நான்பூசை செய்தல் முறையோ?''

ஆகவே, அவர் மலரைப் பறிக்கவும் இல்லை; மலரிலே கண்ட இறைவனுக்குக் கும்பிடு போடவும் இல்லை.



இறைவன் மலரில் இருக்கிறான்; மனிதனது உள்ளத்தில் இருக்கிறான். அவன் இல்லாத இடமே இல்லை. ஆகாசமாக இருக்கிறான்; ஐம்பெரும் பூதங்களிலே ஆகாசந்தான் முதலிலே தோற்றியது. வாயு, அப்பு, தேயு, பிருதுவி என்ற மற்ற நான்கு பூதங்களும் வானில் அடங்கியுள்ளன. ஏனைய நான்கையும் அடக்கி நிற்கும் விண்ணாக அவன் விளங்குகிறான். அதற்குள் அடங்கிய மற்றப் பூதங்களாகவும் இருக்கிறான். தத்துவங்களில் முதலில் தோன்றும் நாதமாக இருக்கிறான். மற்றத் தத்துவங்களும் அவன்தான்.

தன்னைப் பற்றிய செய்திகளைத் தெரிவிக்க வேதத்தை அவன் அருளினான். அந்த வேதமே அவன் திருவுருவந்தான். வேதத்தின் அந்தமாகிய உபநிஷத்துகள் ஞானத்தைச் சொல்கின்றன. வேதமென்னும் மரத்திலே கனிந்த கனிகள் அவை. அந்த வேதாந்தமும் இறைவனுடைய திருவுருவமே.

ஞான தாகம் எடுத்தவர்கள் சிரவணம் செய்யும் நல்லுரைகளாக அவன் விளங்குகிறான்; அப்படிக் கேட்டலாலே உள்ளத்திலே தோன்றும் ஞானமாகவும் அவன் இருக்கிறான். அந்த ஞானத்திலிருந்து முளைத்த ஆனந்தமாகிய முளையாகவும் அவன் திகழ்கிறான்.

தாயுமானவர் உள்ளம் இறைவனுடைய திருவுருவ வகைகளை அளந்தது. ஒரு வடிவிலே பாவித்து இறைஞ்சுவதிலே தொடங்கி மலரூடும், மனத்தூடும், விண்ணிலும், பூதத்திலும், வேதத்திலும், நாதத்திலும், வேதாந்தத்திலும், போதத்திலும், ஞானத்திலும், ஞானானந்தத்திலும் அவன் நிற்பதை அவர் எண்ணி எண்ணிப் பார்த்தார்.

"விண்ணே, விண் ஆதியாம் பூதமே, நாதமே,
வேதமே வேதாந்தமே,
மேதக்க கேள்வியே, கேள்வியாம் பூமிக்குள்
வித்தே, அவ் வித்தின் முளையே!"



இப்படியெல்லாம் இருப்பதோடன்றி, காணும் கண்ணாகவும், கருதும் கருத்தாகவும், கருத்தைப் புலப்படுத்தும் எண்ணாகவும் எழுத்தாகவும் நிற்பவனும் இறைவன்தானே? நல்ல கதிக்குச் செல்வாருக்குத் தன் கரத்தால் வழிகாட்டும் மோனப் பெருமானாகிய தட்சிணாமூர்த்தியும் அவன்தான். மனத்தால் நினைப்பதற்கரிய சிதாகாசத்தின் அடையாளமாகிய சிற்சபையில் ஆனந்தத் தாண்டவமிடும் நடராசப் பெருமானும் அவன்தான். ஒரு நிலையில் மௌனமாக இருந்து சின் முத்திரையினால் உபதேசம் செய்யும் இறைவன், ஒரு நிலையில் ஆனந்தத் தாண்டவம் புரிந்து அருளைப் பிலக விடுகிறான். தட்சிணாமூர்த்தி, நடராஜமூர்த்தி என்ற இரண்டு திருக்கோலங்களும் ஒரே சக்தியின் இருவேறு உருவங்கள். ஒன்று அமைந்த சக்தி (Static Force); மற்றொன்று இயங்கும் சக்தி (Dynamic Force). இரண்டு மூர்த்திகளும் தென் திசையை நோக்கி எழுந்தருளியிருக்கின்றனர். தென் திசையை நோக்கிச் செல்லும் ஆன்மாக்களை உய்விக்கும் பொருட்டு அந்தத் திசையிலே தம் விழிகளை வைத்து அருள்புரிகின்றனர். சாமாறே வாழ்கின்ற மக்களுக்கு ஆமாறு அருள் செய்யும்

இருவிதத் திருக் கோலங்கள் அவை. இருவரும் முயலகனை மிதித்து அவனால் உயிர்களுக்கு வரும் அச்சத்தைப் போக்கு கின்றனர்.

"கண்ணே கருத்தேஎன் எண்ணே எழுத்தே
கதிக்கான மௌனவடிவே!
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே."

இவ்வாறு மூர்த்தங்களாகிய திருவடிவங்களையும், உலகில் உள்ள பொருள்களாகிய வடிவங்களையும், தத்துவங்களாகிய உருவங்களையும் கொண்ட இறைவன் கருணைக்கு ஆகரமாக, இருப்பிடமாக இருக்கிறான். அந்தக் கருணையினால்தான் வடிவில்லாத அவன் வடிவை எடுத்து வருகிறான். ஆனாலும் அவன் வடிவிறந்தவன்; எல்லா வடிவங்களாகவும் இருப்பவன். கண்ணுக்குப் புலப்படும் மலராக இருப்பான். கண்ணுக்குப் புலப்படாமல் கருத்தூடே நிற்பான். அவனைக் கண்டு கும்பிடும் வகை பல உண்டு. தாயுமானவர் எங்கும் அவனைக் காணும் கண்ணை உடையவர். அதனால் அவர் மலரைப் பறிக்கவில்லை; கை குவித்துக் கும்பிடவில்லை. எப்போதும் அப்படி இருந்தார் என்று நினைக்கக்கூடாது. ஒரு சமயத்தில் அப்படி ஒரு வகையான மனநிலை இருந்தது. அதைப் புரிந்துகொள்வதே ஒரு பாக்கியம்.



முழுக்கும்பிடு போடத்தெரியாத நாம் அரைக்கும்பிடு போட்டாலும் இறைவன் ஏற்றுக்கொள்வான்; காற் கும்பிடு போட்டாலும் பெற்று அருள் செய்வான்.

இப்போது தாயுமானவர் பாட்டு முழுவதையும் பார்த்து இன்புறலாம்.

பண்ணேன் உனக்கான பூசைஒரு வடிவிலே
பாவித்து, இறைஞ்ச ஆங்கே
பார்க்கின்ற மலரூடு நீயே இருத்தி; அப்
பனிமலர் எடுக்க மனமும்
நண்ணேன்; அலாமல்இரு கைதான் குவிக்கஎனில்
நாணும்என் உளம்நிற்றி நீ;
நான்கும்பி டும்போது அரைக்கும்பிடு ஆதலால்
நான்பூசை செய்தல் முறையோ?
விண்ணே! விண்ஆதியாம் பூதமே! நாதமே!
வேதமே! வேதாந்தமே!
மேதக்க கேள்வியே! கேள்வியாம் பூமிக்குள்
வித்தே! அவ் வித்தின் முளையே!
கண்ணே! கருத்தே! என் எண்ணே! எழுத்தே!
கதிக்கான மௌனவடிவே!
கருதரிய சிற்சபையில் ஆனந்த நித்தமிடு
கருணா கரக்கடவுளே!

# ஐந்து திருடர்

அழகான வீட்டை ஒரு செல்வர் ஏழை ஒருவனுக்கு அளித்தார். காற்றும் மழையும் கலந்து அடித்தால் கலங்காமல் வாழ்வதற்கென்று அந்த வீட்டை ஏழைக்குக் கொடுத்தார் செல்வர். ஏழை அதிலே வாழ ஆரம்பித்தான். ஒரே இருட்டாக இருந்தது. வாசலில் இருட்டு. வீட்டுக் குள்ளோ சொல்லவே வேண்டாம்.

ஒரு விளக்கை ஏற்றிப் பார்த்தால் உள்ளே உள்ள பொருளும் வெளியிலே உள்ள பொருளும் தெரியும் என்று எண்ணினன் ஏழை. விளக்கைச் சிறியதாக ஏற்றினன். நன்றாகத் தெரியவில்லை. கொஞ்சம் தூண்டினன். சிறிதளவே தெரிந்தது. மறுபடியும் தூண்டினன். எவ்வளவு வேண்டுமோ அவ்வளவு உயரமாகத் தூண்டினன். விளக்குப் பளிச்சென்று தெரிந்தது. "இனிமேல் இந்த வீட்டிலே குடியிருக்கலாம். வேண்டிய பண்டங்களைத் தொகுத்துக் கொண்டுவந்து வைத்து உண்டு வாழலாம்" என்று அந்த ஏழை எண்ணினன்.

'இந்த விளக்கின் உதவியினலும் வீட்டின் உதவியினலும் வாழலாம். மேலும் மேலும் சிறப்பு அடையலாம்' என்று ஊக்கம் உண்டாயிற்று.

ஆனல் விளக்கு நன்முக ஒளிவிடும்போது வீட்டைச் சுற்றிப் பார்த்தான் ஏழை. அந்த வீட்டில் தனியாக வாழலாம் என்று நினைத்து மகிழ்ந்திருந்த அவனுக்குத் தூக்கி வாரிப்போட்டது. அந்த வீட்டில் வேறு மனிதர்களும் இருந்தார்கள். ஒருவர் இருவர் அல்ல; ஐந்து முரட்டுத் திருடர்கள். "அடடா! திருடர்கள் வாழும் இந்த

இடத்துக்கா நாம் வந்து சேர்ந்தோம்!'' என்ற சிந்தனை ஏழைக்கு உண்டாயிற்று. 'நான் ஒருவன்; இவர்கள் ஐந்து பேர். அவர்களுக்கு நடுவிலே எப்படிச் சுதந்தர மாக வாழ முடியும்?' என்ற கவலை வேறு தோன்றியது. ஆனாலும் தன்னுடைய பலத்தினாலே அந்த ஐந்து பேரை யும் அடக்கலாம் என்று பார்த்தான்; முடியவில்லை.

இறைவனுக்கு நல்ல மலர்களைப் பறித்துக்கொண்டு வந்து பூஜை செய்யலாம் என்று எண்ணியிருப்பான் ஏழை. அந்த ஐவரில் ஒருவன் அத்தனை பூவையும் யாரோ ஒரு பெண்ணின் கொண்டையிலே செருகிவிட்டு வருவான். இறைவனுடைய விக்கிரகங்களை வைத்து அலங்கரித்துப் பார்க்க வேண்டுமென்று இடம் பண்ணுவான். அந்த இடத்திலே மண்ணையும் பொன்னையும் பெண்ணையும் கொண்டு வந்து நிறுத்துவான் ஒரு திருடன். இப்படியே நல்ல காரியம் எது செய்ய முயன்றாலும் அந்த ஐந்து பேர்களும் ஏதாவது தடை செய்தார்கள். அவர்களை அடக்கலாம் என்று பார்த்தான்; முடியவில்லை. அவர்கள் மிகவும் பலமுடையவர்களாக இருந்தார்கள்.

''சரி, சரி. இது நம்மால் முடியாத காரியம். வீட்டை நமக்குக் கொடுத்த செல்வரிடமே சொல்லி இந்த ஐந்து பேருடைய கொட்டத்தையும் அடக்கவேண்டும்'' என்று எண்ணினான் ஏழை.

''சுவாமி, எனக்கு நீங்கள் அளித்த வீட்டிலே விளக்கை ஏற்றி வேண்டுமட்டும் உயரத்தூண்டி, வாழும் உபாயம் என்னவென்று அறிந்து, மேலும் மேலும் உயர் வாக வாழலாம் என்று எண்ணினேன். அப்படி நான் எழாதபடி அந்த வீட்டுக்குள், என் முயற்சிகளுக்கெல்லாம் தடையாக ஐந்து பேரை வைத்திருக்கிறீரே! அவர்களை என்னால் அடக்க முடியவில்லை. அவர்கள் சாலவும் வலிய வர்களாக இருக்கிறார்கள். நான் இனி என்ன செய்யட்டும்?

ஒன்றும் தெரியவில்லையே!'' என்று முறையிட்டுக் கொண்டான்.

செல்வர் திருப்புகலூரில் எழுந்தருளியிருக்கும் சிவ பெருமான். ஏழை திருநாவுக்கரசு நாயனார். அவர் பெற்ற வீடு உடம்பு. அதில் ஏற்றின விளக்கு அறிவு. அதனுள் சால வலியராக இருக்கும் ஐவர் ஐம்பொறிகள்.

> மெய்யுளே விளக்கை ஏற்றி
> வேண்டளவு உயரத் தூண்டி
> உய்வதோர் உபாயம் பற்றி
> உகக்கின்றேன்; உகவா வண்ணம்
> ஐவரை அகத்தே வைத்தீர்!
> அவர்களே வலியர் சாலச்
> செய்வதொன்று அறிய மாட்டேன்;
> திருப்புக லூர னீரே!

(மெய் - உடம்பு. விளக்கு என்றது அறிவை. உகக்கின்றேன் - உயர்கின்றேன். உகப்பு - உயர்வு. ஐவர் - ஐம்பொறிகள். சால - மிகவும். திருப்புகலூரனார் என்பதன் விளி திருப்புகலூரனீரே என்பது.)

இந்த ஐந்து பேரும் பண்ணுகிற அமர்க்களத்தை அருணகிரி நாதரும் சொல்கிறார்.

> "ஓரஒட்டார், ஒன்றை உன்னஒட் டார்,மலர் இட்டுனதாள்
> சேரஒட் டார்ஐவர்; செய்வதென் யான்? சென்று தேவர்உய்யச்
> சோரநிட் டூரனைச் சூரனைக் காருடற் சோரிகக்கக்
> கூரகட் டாரிஇட் டோர்இமைப் போதினிற் கொன்றவனே"

என்பது கந்தர் அலங்காரம்.

'சோரனும் கொடுமை புரிபவனுமாகிய சூரனைச் சங்காரம் செய்த பெருமான் நீ அல்லவா? நீ இந்தச் சோரர்கள் ஐவரையும் அடக்கக் கூடாதா?' என்று அவர் விண்ணப்பித்துக் கொள்கிறார்.

# பிரான் என்று அறிந்தேன்

வாசலில் பிச்சைக்காரன் காத்துக்கொண்டிருந்தான். அவன் கையில் ஏதோ ஒரு சிறிய மண்பாத்திரம் இருந்தது. அந்த வீட்டுக்காரர் முன்பு ஒரு பிச்சைக்காரனுக்கு வயிறு நிறையச் சோறு போட்டார் என்று கேள்வியுற்றான் அவன். அதனால் தனக்கும் அவனைப்போலவே பிச்சை கிடைக்கும் என்று நம்பி இவன் வந்து நிற்கிறான்.

அந்த வீட்டுக்காரரிடம் பிச்சை வாங்கினவன் அவரைப் பற்றி என்ன என்னவோ சொன்னான். அதனால் இவனுக்கு ஆவல் மிகுதியாயிற்று. ஆவலோடும், பசியோடும் அந்த வீட்டு வாசலில் அவன் காத்துக்கொண்டிருந்தான். வாசல் திறக்கவில்லை. பிச்சைக்காரன் சோர்வடைந்து திரும்பினான். "என்னுடைய பொல்லாத காலம்" என்று தன் விதியை நொந்து கொண்டு அவன் போய்விட்டான்.

மற்றொரு நாள் ஆயிரக்கணக்கான பிச்சைக்காரர்களுக்கு யாரோ தர்மவான் சாப்பாடு போடுகிறார் என்று கேள்வியுற்றான் இந்த ஏழை. அங்கே போய்ச் சாப்பிட்டான். சாப்பாடு போட்ட வள்ளல் அங்கே வரவில்லை. பிச்சைக்காரர்கள் யாவரும் அந்த வள்ளலை வாயார வாழ்த்தினார்கள். தான் யாரைக் காண ஆவலாய்ச் சென்றானோ அந்தச் செல்வரே இந்தத் தர்மமும் செய்தார் என்று உணர்ந்தபோது அவனுக்குப் பின்னும் ஆவல் மிகுந்தது.

ஒருநாள் விடாப்பிடியாக அவரைத் தேடிக்கொண்டு சென்றான். அவர் வீட்டு வாசலில் படுகாடாய்க் கிடந்தான்.

கடைசியில் அந்தத் தர்மப் பிரபு தம்முடைய காட்சியை நல்கினர். தம் கைந்நிறையச் சோற்றை அள்ளிக்கொண்டு வந்து போட்டார்.

''நீயா?'' என்று அவர் கேட்டுக்கொண்டே போட்டார்.

''நீங்களா!'' என்று அவனும் வியப்பில் ஆழ்ந்தான்.

அவரை அவன் பார்த்திருக்கிறன். எத்தனையோ இடங்களில் எத்தனையோ கோலத்தில் பார்த்திருக்கிறன். பல சமயங்களில் அவரிடம் காசும், துணியும் பெற்றிருக்கிறன். ஆனாலும் அவரே பிச்சைக்காரக் கூட்டத்தைக் காப்பாற்றும் உபகாரி என்று அவன் தெரிந்துகொள்ளவில்லை. அவர் வீட்டில் அவர் அந்தப் பிச்சைக்காரனைத் தெரிந்துகொண்டு, ''நீயா?'' என்று கேட்டபோதுதான் அவனுக்கு உண்மை விளங்கியது.



இறைவனாகிய வள்ளலைக் காணவேண்டும் என்று தேடுகிறவர்கள் பல பேர். அவனுடைய திருவருளால் தனு கரண புவன போகங்கள் கிடைக்கின்றன என்று தெரிந்தாலும் அவனை நம் உயிருக்குத் துணையாக நிற்பவன் என்று அநுபவத்தில் உணரமுடிகிறதில்லை. நூல்களிலே கண்டவற்றால் இறைவனைப்பற்றிய செய்திகளைத் தெரிந்து கொண்டவர்களே பலர். அவனை உள்ள வண்ணம் உணரும் நிலை வந்தால் அப்போது இருக்கும் அமைதியே வேறு. குருடனுக்குக் கண் கிடைத்தது போன்ற நிலை அது; வறியவனுக்குப் புதையல் கிடைத்தது போன்றது அது.

அந்த நிலை எப்படி வரும்? நம்முடைய முயற்சியினால் வரும் என்று சொல்லமுடியாது. முயற்சி வேண்டியதுதான். ஆனால் அது எப்போது பயன் தரும் என்று உறுதியாகக் கூறமுடியாது. இறைவனுடைய திருவுள்ளம் இரங்கி இவனுக்கு அருள் செய்யவேண்டும் என்று அவன் ஆட்

கொள்ளப் புகுந்தாலன்றி அவனை உணர்வதென்பது இயலாத காரியம். நாம் எத்தனை நினைத்தாலும் அவன் அருள் கிடைப்பது அரிது. அவன் நம்மை நினைத்தால்தான் நமக்கு அவனை உள்ளபடி நினைக்க இயலும்.

"நான் பக்தி பண்ணினேன்; அதனால் இறைவன் அருள் கிடைத்தது" என்று சொல்வது செருக்கின் விளைவு. "நான் ஒரு ரூபாய் கொடுத்தேன்; செட்டியார் ஒரு படி அரிசி தந்தார்" என்று சொல்வது போன்றது அது. நம்முடைய முயற்சியால் இறைவன் அருள் கிடைத்தது என்றால் நம் முயற்சிக்குத்தான் பெருமையேயன்றி அவன் அருளுக்குப் பெருமை இல்லை. உண்மை அது அன்று. அவன் அருள் இல்லாவிட்டால் நாம் அன்பு செய்யவே முடியாது. அவன் ஆட்டுவித்தால் நாம் ஆடுவோம். அவன் தன்னை நினைக்கச் செய்தால் நாம் நினைப்போம்.

நம்மை அவன் அடையாளம் கண்டுகொண்டு, "நீ என் அடியான்" என்று கூறினால் நாமும் அவனை அடையாளம் கண்டு கொண்டு, "நீ என் தெய்வம்" என்று உணர முடியும். வெறும் சொல்லளவில் அல்ல; உயிரோடு ஒன்றிய அநுபவத்தில் உணரலாம்.

"அவன் அடியான் என்று என்னை உணராமல், ஏதும் சட்டை பண்ணாமல் இத்தனை காலமும் இருந்தான். நானும் அவனைச் சிறிதும் அறியாமல் இருந்தேன். யார் யாரையோ பிரான் என்று நினைந்து வாழ்ந்தும், இறந்தும், பிறந்தும் சுற்றினேன். எம்பெருமான் என்னைத் தன் அடியான் என்று உணர்ந்து தன் பார்வையை என்மேல் பரப்பினான். அப்பொழுதுதான் நானும் அவனை உணர்ந்து கொண்டேன்; எனக்கு எல்லாமாகி நிற்கும் தலைவன் என்று அறிந்துகொண்டேன்" என்று பாடுகின்றார் அப்பர் சுவாமிகள்.

என்னை ஏதும் அறிந்திலன் எம்பிரான்;
தன்னை நானும்முன் ஏதும் அறிந்திலேன்;
என்னைத் தன்அடி யான்என்று அறிதலும்
தன்னை நானும் பிரான்என்று அறிந்தேனே.

(முன்பெல்லாம் என்னை எம்பிரானாகிய இறைவன் சிறிதும் அறியாது புறக்கணித்திருந்தான்; அவனை நானும் அப்போது சிறிதும் அறியவில்லை. இப்போது என்னைத் தன் அடியான் என்று அறிந்து என்பால் அருளை வைத்தவுடன் அவனை நானும் என் தலைவன் என்று அறிந்து கொண்டேன்.)

அவன் அருளின்றி அவனை அறிதல் இயலாதென்பதைத் திருநாவுக்கரசர் திருவாக்காகிய இப் பாட்டு வலியுறுத்துகின்றது.

# பக்தருக்கு வாய்த்த பயன்

பக்தியை ஞானம் அடைவதற்குரிய வழி என்று கொள்வது ஒரு முறை. ஆனால் அந்தப் பக்தியே இன்ப அநுபவமாக மாறும் நிலை ஒன்று உண்டு. முன்னையதைச் சாதன பக்தி என்றும், பின்னையதைச் சாத்திய பக்தி என்றும் கூறுவர். இறைவனுடைய வழிபாட்டினால் உயர் நிலை அடைந்த பெரியோர்கள் அந்த உயர் நிலை அடைந்த காலத்தும் இறைவனுடைய பூசனையிலும் வழிபாட்டிலும் இன்பம் காணுவார்கள்.

முறுகிய பக்தியினால் வந்தனை வழிபாடுகளிலேயே முற்றிய இன்பம் காணும் நிலையைப் பெரியோர்கள் பல இடங்களில் சொல்லியிருக்கிறார்கள். அன்பு, வழியாக நிற்கும்போது அன்புநெறியாகிறது; அதுவே இன்பமாக மாறும்போது அதுவே சிவமாக நிற்கிறது.

> "அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
> அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
> அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
> அன்பே சிவமாய் அமர்ந்திருப் பாரே"

என்பது திருமூலர் திருவாக்கு.



சென்னைக்குப் புறத்தே ஆலந்தூரிலிருந்து ஒருவன் சென்னையை நோக்கி வருகிறான். அவன் தென்னாட்டிலிருந்து வருகிறவன். தான் வரும் இடம் இன்னதென்று தெரியாமல் அங்குள்ளவரைக் கேட்கிறான்.

"இது என்ன ஊர்?"

"ஆலந்தூர்."

"இது என்ன ரோடு?"

"மௌண்ட் ரோடு."

"சென்னைக்கு இது போகுமோ?"

"ஆகா, போகும்."

பிரயாணி மேலும் நடக்கிறான். சைதாப்பேட்டையை அடைகிறான். அப்போதும் அவன் விசாரிக்கிறான்.

"இது என்ன ரோடு?"

"மௌண்ட் ரோடு."

"இன்னும் சென்னை எவ்வளவு தூரம் இருக்கிறது?"

"மூன்று நான்கு மைல் இருக்கும்."

மறுபடியும் அவன் நடந்து செல்கிறான். 'ஹிந்து' காரியாலயத்துக்கு நேரே வந்துவிட்டான். அப்போது விசாரிக்கிறான்.

"இது என்ன ரோடு?"

"மௌண்ட் ரோடு."

"இது என்ன ஊர்?"

"சென்னை."

"சென்னையா!"

"ஆம்!"

அவனுக்கு ஆச்சரியமாயிருக்கிறது. அவன் மௌண்ட் ரோடிலேதான் நடந்துகொண்டிருக்கிறான். ஆனால் முன்பெல்லாம் மௌண்ட் ரோடு வேறு, சென்னை வேறு என்று எண்ணும்படி ஒரு நிலையில் நடந்துகொண்டிருந்தான். இப்போதோ அதுவே மௌண்ட் ரோடு, அதுவே சென்னை என்ற நிலை வந்துவிட்டது. இப்போதும் மௌண்ட் ரோடில் நடக்கிறான்; ஆனால் சென்னைக்குப் புறம்பே நடக்கவில்லை; சென்னைக்குள்ளேயே நடக்கிறான்.

ஜீவன் முக்தர்களும் பூசை வழிபாடு ஆற்றுகிறார்கள். திருஞான சம்பந்தர் முதலிய பெரியோர்களும் கோயிலை வழிபட்டார்கள். அவர்கள் நிலை இரண்டாவது நிலையைப் போன்றது.

இறைவனைக் கும்பிடுவதே அவர்களுக்கு இன்ப நிலை. அன்பு என்பது சாதனம் என்ற நிலைபோய் அதுவே சாத்தியம் அல்லது விளைவு என்ற நிலை வந்துவிட்டது.

வழிபாடு செய்வதே பேரின்பமென்றும், அதனினும் வேறாகிய இன்பம் இல்லையென்றும் சொல்லும் இடங்களில் எல்லாம் இந்த உயர்ந்த நிலையையே பெரியோர்கள் தம் திருவுள்ளத்தில் கொள்கிறார்கள். அந்த நிலையைத் தமிழ் நூல்களில் பல இடங்களில் காணலாம். இன்று நேற்று வந்தவர்கள் சொன்னது என்று சொல்லலாமா? மிகப் பழங் காலத்திலேயே இந்த நிலைமையைப் பற்றித் தமிழர்கள் தெரிந்துகொண்டிருக்கிறார்கள்.



சங்ககாலப் புலவர்களில் ஒருவராகிய நல்லெழினியார் என்பவர் திருமாலைப் பாடுகிறார். அவனைத் தொழுபவருக்குத் துறக்கம் உண்டு என்று சொல்லுகிறார்.

"திருவரை அகலம் தொழுவோர்க்கு
உரிதமர் துறக்கமும் உரிமைநன் குடைத்து."

அவனைத் தொழுவோருக்குத் துறக்கம் உரியதாகக் காத்துக் கொண்டிருக்கிறதாம். இப்படிச் சொன்னவர் அப் பெருமானிடம் தம் வேண்டுகோளைச் சமர்ப்பிக்கின்றார். 'என்றைக்கும் குறையாத வலிமையை உடையவன் நீ; யாரிடத்தும் சினம் இல்லாமலே சிவந்த திரு நோக்கத்தை உடைய செந்தாமரைக் கண்ணன் நீ; போரிலே மேம்படும் சக்கரப் படையை உடையவன் நீ;

நெருப்புப் போன்ற வெட்சி மலரை இடையிலே வைத்துத் தொடுத்த மணம் பொருந்திய துழாய் மாலையை அணிந்த மார்பை உடையோய் நீ" என்று போற்றினவர் அவர்.

> "அருஅ மைந்திற் செருஅச் செங்கட்
> செருமிகு திகிரிச் செல்வ, வெல்போர்
> எரிநகை இடையிடுபு இழைத்த நறுந்தார்ப்
> புரிமலர்த் துழாஅய் மேவல் மார்பினோய்!"

('அழியாத பலத்தையும் கோபிக்காமல் சிவந்த கண்ணையும் சக்கரப் படையையும் உடைய அருட்செல்வனே! வெல்லுகின்ற போரையும், நெருப்புப் போன்ற வெட்சி அரும்பை இடையிட்டுத் தொடுத்த மணம் உள்ள மாலையையும், விரிந்த மலரையுடைய துழாயை விரும்பியணிந்த மார்பையும் உடையோய்!)

இவ்வாறும் பிறவாறும் போற்றி செய்துவிட்டு இறுதியில் தம் வேட்கையைத் தெரிவிக்கிறார். "எனக்குப் புகழ் வேண்டும்" என்று கேட்கவில்லை; "பொன் வேண்டும்" என்று ஆசைப்படவில்லை; "போகம் வேண்டும்" என்று சொல்லவில்லை; "முக்தி வேண்டும்" என்று கூட விண்ணப்பித்துக்கொள்ளவில்லை.

> "அன்னை என நினைஇ நின்அடி தொழுதனெம்;
> பன்மாண் அடுக்க இறைஞ்சினெம்; வாழ்த்தினெம்."

"அப்படி எல்லாம் இருப்பவன் நீ என்று நாங்கள் மனத்தால் தியானித்தோம். நின் திருவடியைக் கைகுவித்துத் தொழுதோம். பல முறை மீட்டும் மீட்டும் கீழே விழுந்து வணங்கினோம். வாயார நின் சீர்பாடி வாழ்த்தினோம்" என்கிறார்.

"இப்படியெல்லாம் செய்வதற்கு நாங்கள் பெருந்தவம் புரிந்திருக்கவேண்டும். அந்தத் தவத்தின் பயனாகவே உன்னை நினைத்தும் வாழ்த்தியும் இறைஞ்சியும் வாழும் வாழ்வு எமக்குக் கிடைத்தது. ஆதலின் யாம் செய்த தவமாகிய சாதனத்தால் இந்த வழிபாடாகிய சாத்தியம்

கிடைத்திருக்கிறது. இந்த வழிபாடே யாம் பெறுவதற்குரிய பேருக இருப்பதனால் இதையே இன்னும் இன்னும் செய்யவேண்டும். எங்கள் ஆசை இதுதான். நின் வழிபாடே யாம் பெறும் இன்பம்'' என்று சொல்கிருர்.

"அன்னை என நினை இ நின்அடி தொழுதனெம்,
பன்மாண் அடுக்க இறைஞ்சினெம், வாழ்த்தினெம்,
முன்னும் முன்னும்யாம் செய்தவப் பயத்தால்;
இன்னும் இன்னும்எம் காமம் இதுவே."

அவருக்கு வழிபாட்டுக்கு மேற்பட்ட இன்பம் ஒன்று இருப்பதாகத் தோன்றவில்லை. அதனால் 'இன்னும் இன்னும் இதுவே' வேண்டும் என்று கேட்கிருர்.

மற்ருெரு புலவர் முருகவேளை வேண்டுகிருர். அந்தப் புலவரின் பெயர் கேசவனுர் என்பது. செவ்வேளின் புகழை விரிவாகப் பாடின அவர் பாட்டின் இறுதியில் தம் வேண்டுகோளைத் தெரிவிக்கிருர்.

''அத்தகைய சிறப்பெல்லாம் பொருந்தியவன் நீ; ஆதலால் உன்னை நாங்கள் அடுத்தடுத்து வழிபடுகிருேம். அதற்குப் பயன் இந்த வழிபாடுகள் எங்களிடம் குறையாமல் நிறைவு பெற்று நிற்பதே'' என்பது அவர் வேட்கை.

''அன்னை ஆகலின், அமர்ந்துயாம் நின்னைத்
துன்னித் துன்னி வழிபடு வதன்பயன்
இன்னும் இன்னும்அவை ஆகுக."

மேலே சொன்ன இரண்டும் சங்க காலத்து நூலாகிய பரிபாடல் என்பதில் உள்ளவை. அந்தப் பழங்காலத்திலேயே வேறு எதையும் வேண்டாமல் இறைவனை வழிபடுவது ஒன்றையே முடிந்த பயனுகக் கொள்ளவேண்டும் என்ற கருத்து, இந்நாட்டினரிடம் இருந்துவந்ததற்கு இப்பகுதிகள் சாட்சியாக நிற்கின்றன.

★

சேக்கிழார் திருத்தொண்டர்களின் வரலாற்றைப் பாடித் தொண்டர் சீர் பரவுவார் என்ற சிறப்பைப் பெற்றார். அறுபத்து மூன்று நாயன்மார்களும் வெவ்வேறு காலத்தில் வெவ்வேறு இடத்தில் வாழ்ந்தவர்கள். அந்த அடியார்களின் பொது இயல்பைத் 'திருக்கூட்டச் சிறப்பு' என்ற பகுதியில் சேக்கிழார் தொகுத்துத் தருகிறார்.

அவர்கள் யாவரும் ஜீவன் முக்த நிலையில் உள்ளவர்கள். அவர்களுக்கு லாப நஷ்டம் இல்லை. ஓடானாலும் பொன்னானாலும் ஒன்றாகவே பார்க்கும் சமதரிசனம் படைத்தவர்கள்.

"கேடும் ஆக்கமும் கெட்ட திருவினர்,
ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்."

இதற்கு மேல் அவர்கள் இயல்பு ஒன்றைச் சொல்கிறார். பரிபாடலில் உள்ள கருத்து விரிந்து மலர்ந்தது போல அப்பகுதி இருக்கிறது.

**"கூடும் அன்பினிற் கும்பிட லேஅன்றி**
**வீடும் வேண்டா விறலின் விளங்கினார்."**

அன்பு நிறைந்து கூடியதனால் இறைவனை வழிபடுவதையன்றி முக்தியும் வேண்டாம் என்று சொல்லும் வீரம் அவர்களிடம் விளங்கியதாம். பரிபாடற் புலவர்கள் மீண்டும் மீண்டும் வழிபாடு செய்வதே வேண்டும் என்றார்கள். 'முக்தி வேண்டாம்' என்று வெளிப்படையாகச் சொல்லவில்லை. 'கும்பிடலே வேண்டும்' என்று அவர்கள் சொன்ன கருத்துக்குப் பின்னும் அரண் அமைத்து, 'வீடும் வேண்டாம்; கும்பிடல் போதும்' என்று இந்தத் தொண்டர்கள் நினைப்பதாகச் சேக்கிழார் கூறினார்.

'அன்பு முதிர்ச்சியால் கும்பிடுவதில் இன்பம் உண்டாகிறது. அந்த இன்பம் வேண்டும்' என்பது ஒரு நிலை. 'வீடு என்ற ஒன்று குறைவு இலா இன்பத்தைத் தருவது.

அதுகூட வேண்டாம்; இந்த இன்பமே போதும்' என்று தியாகம் பண்ணி நிற்பது அடுத்த நிலை. முன்னையது முளைத்து வளர்ந்து மலர்ந்தது பின்னைய நிலை.

இனி மலர்ந்து காய்த்துக் கனியவேண்டாமா? அருணகிரி நாதர் அந்தக் கனிந்த நிலையைக் காட்டுகிறார்.

"வீடு என்று ஒன்று வேறே இருப்பதுபோல எண்ணி அதை இறைவன் தருகிறேன் என்று சொன்னாலும் வேண்டாம் என்று சொல்லும் இயல்பு கிடக்கட்டும். வீடு என்பது வேறு ஏது? இறைவன் திருவடியை வழிபட்டு வாழும் இதுதானே வீடு? பக்தியால் வழிபாடு செய்வதே நாம் பெறும் வீடு. வீட்டுக்கும் இதற்கும் வேறுபாடு இல்லை. இதுவே வீடு" என்று சொல்லும் கனிப்பதத்தை அவர் காட்டுகிறார்.

**"ஆனபய பக்திவழி பாடுபெறும் முக்தியது**
**வாகநிகழ் பக்தஜன வாரக்காரனும்"**

என்பது வேளைக்காரன் வகுப்பு.

"தம்மிடத்தில் முதலில் தோன்றிய பயபக்தியினால் வளர்ந்த வழிபாடே தாம் பெறும் முக்தியாக அமைய, அதில் வாழ்கின்ற பக்த ஜனங்களின் அன்பைப் பெற்றவன்' என்பது இதன் பொருள், பக்தியை முக்தியதுவாக அநுபவிக்கிறவர்கள் அவர்கள்; நடைமுறையில் அப்படி நிகழ்கிறது. பக்தியை மார்க்கமென்று சொல்வது சாமான்ய அநுபவம். அதுவே சித்தியாக மாறுவது மிக மிக உயர்ந்த அநுபவம். அதனையே பரிபாடலும், பெரிய புராணமும், திருவகுப்பும் எடுத்துச் சொல்லுகின்றன.

**"பக்தி சித்தி காட்டி அத்தர் சித்தம் மீட்ட**
**பக்தருக்கு வாய்த்த பெருமாளே"**

என்று திருப்புகழில் அருணகிரி நாதர் முருகனைத் துதிக்கும்போது அவன், 'பக்தருக்கு வாய்த்த பெருமாள்'

என்று சொல்கிறார். பக்தருக்கு அவன் செய்யும் சிறப்பு என்ன தெரியுமா? வண்டியிலேறி மாளிகைக்குப் போக வைக்காமல் வண்டியையே மாளிகையாக்கிவிட்ட மகா ராஜன் அவன். அன்பையே இன்பமாக்கின அமுதன் அவன். பக்தியையே சித்தியாக்கிக் காட்டும் பரமன் அவன். ஆதலின் அவன் பக்தருக்கு வாய்த்த பெருமாள் ஆகிறான்.

ஆம்! பக்தியே சித்தியாகவும் பாரகமே முக்தியுலக மாகவும் துய்ப்பவர்கள் வாழும் நாடு பாரதநாடு.

"அன்றே அப்போதே வீடு அதுவே வீடு வீடாமே" என்று நம்மாழ்வார் முழங்கும் நாடு இது.

# அருட்கண்

கண்ணினாலே நாம் பார்க்கும் பார்வையில் எத்தனையோ வகைகள் இருக்கின்றன. கண்ணைத் திறப்பதனால் மாத்திரம் எதிரே உள்ள பொருள் தெரியாது. எத்தனையோ சமயங்களில் நாம் கண்ணைத் திறந்து பார்த்துக் கொண்டிருந்தும், ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்தமையால் அங்கே போகிறவர்களைப் பார்ப்பதில்லை. கண் அப்போது மூடியா இருந்தது? இல்லை. கண் பார்க்கும்போது கருத்தும் அதனோடு இணைய வேண்டும். அப்போதுதான் எதிர்நின்ற பொருளின் உருவத்தைப் பார்த்த அநுபவம் ஏற்படும். சிலர் கண்ணைப் பாதி விழித்துக்கொண்டே தூங்குவார்கள். கண் விழித்திருந்தாலும் அவர்களுடைய மனம் விழித்திருக்கவில்லை. அதனால்தான் பார்க்கும் அநுபவம் உண்டாவதில்லை.

ஆகவே, கண்ணும் கருத்தும் ஒன்றுபடும் போது பார்க்கிறோம்; கண் பயன்படுகிறது; பார்த்தலாகிய செயல் நிகழ்கிறது. வேறு வகையாகச் சொன்னால் கண் உணர்ச்சியுடையதாக வேண்டுமானால் கருத்தோடு கலக்க வேண்டும்.

எல்லோருக்கும் கண் இருந்தாலும், ஒரே பொருளைப் பார்த்தாலும், அவர்கள் பார்வையின் தன்மை வெவ்வேறாக இருக்கிறது. ஓர் உதாரணத்தைப் பார்க்கலாம்.

என் நண்பர் ஒருவர் மலையாளத்தில் காட்டிலாகாவில் வேலையாய் இருக்கிறார். அவர் நல்ல பெரிய சேகு ஏறிய கருங்காலி மரம் ஒன்றை எனக்கு அனுப்பி வைத்தார். நல்ல அருமையான மரம் அது. அதை என் வீட்டு முற்றத்தில் போட்டிருந்தேன்.

என் பக்கத்து வீட்டுப் பாட்டி வந்தாள். அவள் அந்த மரத்தைப் பார்த்தாள். "ஆகா, எவ்வளவு பெரிய மரம்! இந்தப் பனிக்காலத்தில் விடியற்காலம் மிகவும் குளிர்கிறது. வெந்நீரில் குளிக்க வேண்டியிருக்கிறது. வெந்நீருக்கு விறகு கிடைக்கிறதில்லை. இந்த மரம் கிடைத்தால் வெட்டி அடுப்பு எரிக்கலாமே. இரண்டு வண்டி விறகுக்குக் குறை வில்லை" என்ருள். பாட்டியின் கொள்ளிக்கண்கள் அந்த மரத்தைப் பார்வையால் எரித்தே விட்டன.

அதே கருங்காலி மரத்தை ஒரு தச்சன் பார்த்தான். "அடடா! இது எப்படிப்பட்ட மரம்! இது உங்களுக்கு எங்கே கிடைத்தது? இதைக் கொண்டு இரண்டு மூன்று நாற்காலிகள், மேஜைகள் எல்லாம் பண்ணலாமே!" எனக் கூறினன்.

அதையே ஒரு மரச்சிற்பி பார்த்தான். மரத்தைக் கடைந்து விதவிதமான உருவங்களைச் செய்வதில் வல்லவன் அவன். "இப்படி வயிரம் பாய்ந்த மரத்தை நான் தேடிக் கொண்டே இருக்கிறேன். கிடைக்கவில்லையே! இந்த மரத்தில் ஆண்டவனுடைய திருவிளையாடல்களை யெல்லாம் செதுக்கிவைத்தால் எவ்வளவு அழகாக இருக்கும்!" என்று அவன் சொன்னான்.

பாட்டியும் தச்சனும் மரச்சிற்பியும் ஒரே மரத்தைத் தான் பார்த்தார்கள். என்றாலும் அவர்கள் உள்ளக்கருத் துக்கு ஏற்றபடி வெவ்வேறு விதமாக எண்ணினர்கள். அந்த மூவருடைய கண்களுக்குள் எந்த விதமான வேறு பாடும் இல்லை; பார்வையில் குற்றம் இல்லை. மூவரையும் டாக்டரிடம் அழைத்துச் சென்று கண்களைப் பரிசோதித் தால் எந்த விதமான வித்தியாசத்தையும் காணமுடியாது. அவர்களுடைய உள்ளுக்குள்ளே உள்ள கருத்தில்தான் வேறுபாடு காணமுடியும்.

நல்லவர்கள் என்றால் அவர்கள் முகம் தாமரை போலவும், கெட்டவர்கள் என்றால் அவர்கள் முகம் வேறு விதமாகவும் இருக்கும் என்று நினைப்பதற்கு இல்லை. கெட்டவர்கள் பூதம்போலவோ பேய்போலவோ இருக்க மாட்டார்கள்.

"மக்களே போல்வர் கயவர்; அவர்அன்ன
ஒப்பாரி யாம்கண்டது இல்"

என்று திருவள்ளுவர் சொல்கிறார். 'நல்ல மக்கள் எப்படி இருப்பார்களோ அப்படியேதான் கெட்ட மக்களும் இருப் பார்கள்' என்று சொல்கிறார். நல்லவர்கள் கண்ணுக்கும் கெட்டவர்கள் கண்ணுக்கும் வேறு பாடு தோன்றுது. நல்லவர்களுடைய பார்வையிலே அவர்களுடைய நல்ல கருத்து இணைந்து விளங்கும்; அதனால் அது நல்ல பார்வை; குளிர்ந்த பார்வை; அன்புப் பார்வை. அந்தக் காரணத்தால் அவர்கள் கண்களை நல்ல கண்கள் என்று சொல்கிறோம். தீய மக்களுடைய கண்ணிலே கோளாறு இல்லா விட்டாலும் அவர்கள் பார்க்கும்போது அவர்களுடைய தீய கருத்து அதில் கலக்கிறது. அதனால் அந்தப் பார்வை சுடும் பார்வையாக இருக்கும். அதைக் கொண்டு அத்தகைய கண்ணைக் கொள்ளிக் கண் என்று சொல்கிறோம்.

சேகு ஏறிய கருங்காலி மரத்தைக் கண்ட பாட்டி அதைச் சுட்டு எரித்துவிட்டாள். அது சேகு ஏறிய மரம் ஆயிற்றே என்ற கவலை அவளுக்குக் கிடையாது. அந்த மரத்தில் உள்ள வன்மைத்தையும் அதன் திண்மைத்தையும் அவள் பார்க்கவில்லை. அவள் அதை விறகாகப் பார்த் தாள். ஆனால் அதைப் பார்த்த தச்சன் அதை விறகாக எண்ணவில்லை. அதனை எரித்துவிடும் எண்ணம் அவன் மனத்தில் தோன்றவில்லை. அவன் பாட்டியைவிட உயர்ந்த வன். அவன் அதன் வன்மைத்தையும் பார்த்தான்; திண்

ணத்தையும் பார்த்தான். தன் எசமானருக்கு உபயோக மாகும் நாற்காலி, மேஜை போன்ற கருவிகளாகச் செய்ய லாமே என எண்ணினான். அவன் தொழிலாளி. அவன் எண்ணியதை நியாயம் என்று சொல்பவர்கள் இருக்கி றார்கள். பயன்படும் மதிப்பு (utility value) அதற்கு இருக்கிறது என்று அவன் தெரிந்துகொண்டிருக்கிறான்.

நாற்காலி தனியாக இருந்தால் என்ன பயன்? அதன் மேல் உட்காருவதற்கு ஒரு மனிதன் இருந்தால்தான் அதன் பயன் புலப்படும். அது கருவி. கருவிக்குத் தனியான சிறப்பு இல்லை. பயன்படுத்துபவர் இல்லாவிட்டால் அதற்கு வேலை இல்லை.

அதே மரத்தில் இறைவனுடைய திருவிளையாடல் களைச் சிற்பியை விட்டுச் செதுக்கச் செய்தால் அது கலைப் பொருளாகிறது. கலை தனியாகவே நின்று இன்பம் பயக்க வல்லது. கருத்தில் உள்ள கவலையைப் போக்கவல்லது. பல ஆண்டுகளானாலும் கலைப் பொருளைக் காண்பவர் பரவசம் அடைவார்கள். சிற்பியின் கண்ணும் கலைமயமான அவன் கருத்தும் இணைந்த பார்வை கலைப் பார்வை. வெறும் கண்ணால் பார்த்திருந்தால் விறகாக அவனும் எண்ணி யிருக்கலாம். வண்ணத்தையும் திண்ணத்தையும் பார்க்கும் அளவில் நின்றிருந்தால் கருவிப் பொருளாகிய நாற்காலி முதலியவற்றைச் செய்ய உதவும் என்று எண்ணியிருக்க லாம். பண்பட்ட உள்ளத்தோடு, கலைஞானம் நிறைந்த கருத்தோடு பார்த்தவன் ஆகையால் அவனுடைய கற்பனை கலைப் பொருளாக்குமாறு தூண்டியது. இறைவனுடைய நினைவும் இருப்பதனால் திருவிளையாடற் சிற்பத்தைச் செதுக்கலாம் என்று எண்ணினான். அவன் எண்ணத்தில் ஏற்றம் இருக்கிறது. அவன் பார்வையில் பண்பு இருக் கிறது. அவன் கண் நல்ல கண்; அருட் கண்.

அருட் கண்ணைப் பெற்றிருந்தமையால்தான், நாரையையும் கொக்கையும் செய்யலாம் என்று எண்ணுமல் இறைவன் திருவுருவங்களை அமைக்கலாம் என்று எண்ணினன். அருட் கண் இல்லாமல் கொள்ளிக் கண்ணுக இருந்தால் அவன் கற்பனையில் அது எரிந்து சாம்பராகியிருக்குமே.

அந்த மரம் சாமானிய மரம் அன்று. எங்கும் கிடைப்பது அன்று. மர வகையில் அருமையாகக் கிடைக்கும் வகை என்பது மட்டும் அல்ல; கருங்காலி மரம் அரியது தான். ஆனல், அது சேகு ஏறிய மரம் நல்ல பண்டம். அரும்பொருள். ஆனல் அதன் அருமை முழுதும் காணும் தன்மை சிற்பியின் கண்ணுக்குத் தான் இருந்தது. அவன் அருட்கண்ணல் நோக்கினன்; அரும் பொருள் தோன்றியது; அரும்பொருளின் அருமை தெரிந்தது; அரும்பொருள் வெறும் பொருளாக, விறகுக் கட்டையாகத் தோன்றுமல் அரும்பொருளாகவே தோன்றியது. அது இல்லாததனல் மற்றவர்களுக்கு அப்படித் தோன்றவில்லை.

திருமூலர் இந்த அருட்கண்ணைப் பற்றிப் பாடுகிருர்:

**அருட்கண் இலாதார்க்கு அரும்பொருள் தோன்ரு;**
**அருட்கண் உளோர்க்கு எதிர்தோன்றும் அரனே.**

அருட் கண் இல்லாதவர்கள் புறக் கண்ணலே மாத்திரம் ஒன்றைப் பார்த்தால் அதைத் தமக்குப் பயன் படுத்திக்கொள்ளவேண்டும் என்றே நினைப்பார்கள். புறக் கடையிலே புடலங்காய் காய்த்துத் தொங்குகிறது. அதை அருட் கண் இல்லாத ஒருவன் பார்த்தால் அதன் எழிலையும் மென்மையையும் பார்த்துக்கொண்டேயா இருப்பான் அதை உடனே பறித்துச் சமைத்து உண்பான்; இல்லா விட்டால் சந்தைக்கு அனுப்பிப் பணமாக மாற்றிவிடுவான் ஆனல் இறைவன் அருளை நினைக்கிறவன், அவனது

அருளையே நம்பி வாழ்கிறவன் ஒருவன் அதைக் காண்கிறான். அவன் அதில் இறைவனைக் காண்பான். அதன் வண்ணத்தையும் எழிலையும் கண்டு, இறைவனுடைய படைப்பின் அழகிலே ஈடுபட்டு இன்புறுவான். அதைப் பறித்தாலும் மாகேசுவர பூசைக்கு உபயோகப்படுத்துவான். கருத்திலே அருள் நினைவு இருப்பதால் அவன் கண்ணில் அருள் கொழிக்கிறது.

வரகுண பாண்டியன் என்ற மன்னன் ஒருவன் இருந்தான். அவன் பாண்டிய நாட்டையும் சோழ நாட்டையும் சேர்த்து ஆண்டு வந்தான். ஆற்றல் மிக்க அவன் பாண்டிய நாட்டு மன்னனாக மதுரையில் தங்கிச் சோழ நாட்டையும் தன் ஆணையின் கீழ் வைத்து ஆண்டிருக்கலாம். அல்லது சோழ நாட்டுத் தலைநகரான உறையூரிலே தங்கித் தன் அரசாட்சியை நடத்தியிருக்கலாம். அவனோ சோழநாட்டில் உள்ள திருவிடைமருதூரில் வந்து இருந்து ஆட்சிபுரிந்தான். மதுரைக்கும் போய்வருவதுண்டு. ஆனாலும் பெரும்பாலும் திருவிடைமருதூரிலே இருந்து வந்தான். காரணம் என்ன தெரியுமா? அவன் குழந்தைப் பருவத்திலிருந்தே சிவலிங்க வழிபாட்டில் ஊன்றிய பற்றுக்கொண்டிருந்தான். எந்த ஊரிலே பெரிய சிவலிங்கம் இருக்கிறதோ அங்கே தங்கவேண்டும் என்று நினைத்தான். தஞ்சைப் பிருகதீசர் கோயில் இல்லாத காலம் அது. திருவிடைமருதூரில்தான் மகாலிங்கம் எழுந்தருளியிருக்கிறார். ஆகையால் அங்கே வந்து அரசாட்சி புரிந்ததோடு தினந்தோறும் சிவலிங்கப் பெருமானையும் தரிசித்துவந்தான்

அருட் கண்ணைப் பெற்றிருந்த அந்தமன்னன் ஒருநாள் ஆலயத்துக்குச் சென்றுகொண்டிருந்தபோது வழியில் ஒரு வேப்ப மரத்தைக் கண்டான். அதில் நிறையப் பழங்கள் பழுத்திருந்தன. அப்படியே நின்றுவிட்டான். அந்தப் பழத்தில் அவன் உள்ளம் ஈடுபட்டது. அவற்றைத் தின்ன

வேண்டும் என்ற எண்ணத்தால் அல்ல. அது காகத்தின் வேலை அல்லவா? அவனுக்கு அவை வேப்பங்கனிகளாகவே தோன்றவில்லை. எல்லாக் கனிகளும் சிவலிங்கப் பெரு மானைக் காட்சி அளித்தன. உடனே அந்த மரத்துக்கு மேல் விதானம் அமைக்கச் செய்தான்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு பழநியில் பேகன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். பழநிக்கு ஆவினன் குடி என்று ஒரு பெயர் உண்டு. அவன் முரு கனிடம் தளர்வில்லாத அன்புடையவன். ஆவினன் குடியில் எழுந்தருளியிருக்கும் முருகவேளை நாள்தோறும் தரிசனம் செய்து இன்புறுகிறவன். ஒரு சமயம் அவன் நடந்து வந்துகொண்டிருக்கையில் வழியில் ஒரு மயில் ஆடிக் கொண்டிருந்தது. ஆடும்பொழுது மயில் அடிக்கடி, "சர்ர், சர்ர்" என்று தோகையைச் சிலிர்த்துக்கொள்ளும். அந்தச் சிலிர்ப்பைப் பேகன் கண்டான். அவனுக்கு மனசில் கவலை உண்டாயிற்று. "நம்முடைய ஆண்டவன் ஏறிப் பவனி வரும் அழகிய வாகனம் அல்லவா இது? இது உடம்பைச் சிலிர்த்துக்கொள்கிறதே! இதற்குக் குளிர்கிறதோ!" என்று எண்ணித் தன்மேல் அணிந்திருந்த விலை உயர்ந்த சால்வையை எடுத்துப் போர்த்துவிட்டான். முருகனுடைய வாகனம் என்ற நினைவும் அதற்குத் துன்பம் உண்டான தாகக் கற்பனை செய்துகொண்ட கருத்தும் எல்லோருக்கும் வருமா? உலகத்தில் உள்ள பொருள்களைக் காணும் போதெல்லாம் இறைவனுடைய தொடர்பை நினைக்கும் கருத்தும், அதனோடு இணைந்து பார்க்கும் அருட்கண்ணும் படைத்தவன் பேகன். இத்தகைய அருட் கண் உடை யோருக்கு எதிரே அரனே தோன்றுவான் என்று திரு மூலர் சொல்கிறார்.

ஒருவன் குருடனாக இருந்தால் அவனுக்கு இருளுக்கும் ஒளிக்கும் வித்தியாசம் தெரியாது. சூரியன் வானில் ஒளி

விட்டாலும் அவ்வொளியைக் காண அவனால் முடியாது. சூரியன் ஒளியும் அதனைக் கொண்டு பார்ப்பதற்குரிய பொருள்களும் அவன்முன் இருந்தும் அவன் கண்ணில் ஒளி இல்லை; அதனால் ஒன்றுமே தெரிவதில்லை. சூரியன் இருந்தும் குருடனுக்கு அதனால் பயன் இல்லை. அப்படியே கண் இருந்தும் இறைவன் அருள் தொடர்பு இல்லா விட்டால் உண்மை தோன்றாது; எங்கும் இறைவன் மய மாக இருத்தலைக் காணும் பார்வை உண்டாகாது.

ஒரு கிழவர்: அவருக்குச் சாளேசுவரம் வந்தது. "படிக்க முடியவில்லை" என்று சொல்லிக் கஷ்டப்பட்டார். பிறகு கண்ணாடி போட்டுக்கொண்டார். அதன் பிறகு அவரால் நன்றாகப் படிக்க முடிந்தது. இதை ஒருவன் கண்டான். கண்ணாடி போட்ட பிறகு அவர் நன்றாகப் படிப்பதைக் கண்டு வியப்படைந்தான். உடனே ஒரு கண்ணாடிக் கடைக்குப் போனான். ஒரு கண்ணாடியை எடுத்துப் போட்டுக்கொண்டான். புத்தகத்தை எடுத்துப் பார்த்தான். "தெரியவில்லையே!" என்றான். கடைக்காரன் வேறொரு மூக்குக் கண்ணாடியைக் கொடுத்தான். அதையும் போட்டுப் பார்த்தான்; அப்போதும் தெரியவில்லை. கொட்டை எழுத்தாக உள்ள புத்தகம் ஒன்றைக் கொடுத்துப் பார்க்கச் சொன்னான். அதையும் வாசிக்க முடியவில்லை. கடைக்காரன் நாலைந்து கண்ணாடிகளை மாற்றினான். ஒன்றுகூடச் சரிப்படவில்லை. கடைக்காரன் பேச்சுவாக்கில் அந்த மனிதனை, "நீங்கள் எதுவரையில் படித்திருக்கிறீர்கள்?" என்று கேட்டான். அப்போதுதான் உண்மை புலப்பட்டது. "எனக்குப் படிக்கத் தெரியாதே! அதற்குத்தானே கண்ணாடி போட்டுக்கொள்ள வந்தேன்? பக்கத்து வீட்டுக் கிழவர் கண்ணாடி போட்டுக்கொண்ட பிறகு நன்றாகப் படிக்கிறார். எனக்கு மாத்திரம் படிக்க முடியவில்லையே!" என்று அந்த அப்பாவி பதில் சொன்னான்

படிக்கிற ஆற்றல் கண்ணாடியினால் உண்டாகும் என்று அந்த அசட்டு மனிதன் எண்ணினான்!

படிக்காதவனுக்கு மூக்குக் கண்ணாடி புத்தகம் படிக்க உதவாது. கண்ணாடி போட்டுக்கொண்டால் எதையும் படிக்கலாம் என்று எண்ணுவதுபோலப் புத்தகங்களை வாங்கி வைத்துப் படித்தால் எல்லாம் தெரிந்துவிடும் என்று எண்ணுவதும் தவறு. அருட்பசி வேண்டும். இறைவன் அருளை உள்ளத்தே இருத்திப் படித்தால் அதற்கு முன் புலனாகாத பொருள் எல்லாம் விளங்கும்.

> இருட்கண்ணி னோர்க்குஅங்கு
> இரவியும் தோன்றா;
> தெருட்கண்ணி னோர்க்குஎங்கும்
> சீர்ஒளி ஆமே

என்கிறார் திருமூலர்.

நமக்கு எல்லாப் புலன்களும் இருந்துங்கூடச் செவ்வையாக இல்லை. நம்முடைய மூக்கு மலரின் மணத்தை நன்கு உணர்வதில்லை. தாமரை மலரில் மென்மையான மணம் இருக்கிறது என்றால் அது பலருக்கு வேடிக்கையாக இருக்கிறது. புகையும் புழுதியும் கப்பிக்கொண்டமையால் நம்முடைய மூக்கு மரத்துவிட்டது. நெடியாக இருந்தால் தெரிகிறது. ரோஜாப் பூவின் மணம் ஓரளவு தெரிகிறது. தாமரையின் நறுமணம் தெரிவதில்லை. நம்முடைய மூக்கில் உள்ள நரம்புகள் மென்மையை இழந்துவிட்டனவேயன்றித் தாமரை மணத்தை இழந்துவிடவில்லை.

சோலையில் குயில் கூகூ என்று கூவுகிறது. அது காதில் விழுவதில்லை. விளம்பரத்துக்காகத் தெருவிலே ஒலி பெருக்கி வைத்து இரவும்பகலும் முழங்கும் முழக்கத்தையும் மோட்டாரின் ஓசையையும் வன்மையான ஒலிகளையும் கேட்டுக் கேட்டுக் காது ஜவ்வுகள் வன்மை அடைந்து

விட்டன. சில நுட்பமான ஒலிகளைக் கேட்கும் மென்மை நம் காதுக்கு இல்லை. வண்டு முரல்கிறது என்று பாட்டிலே கண்டால் அது பொய் என்று சொல்கிறோம்.

மெல்லிய மலரின் மணத்தையும் குயிலின் இனிய கீதத்தையும் வண்டின் ரீங்காரத்தையும் நம் மேலே பட்டு நம்மையெல்லாம் தடவிக்கொண்டு செல்லும் காற்றின் மென்மையையும் உணரமுடியாதபடி நம்முடைய பொறிகள் மரத்துப் போய்விட்டன. இப்படி உடம்பில் உள்ள பொறிகளையே மரக்க அடித்துவிட்ட நமக்கு இன்னும் நுட்பமான அருட் கண்ணைப் பற்றி யாராவது சொன்னால் எல்லாம் கட்டுக் கதை என்றே தோன்றும். ஆண்டவன் திருவுருவத்தை எங்கும் பார்க்கும் நிலை அருட்கண் உடையாருக்கு உண்டு என்பதைக் கற்பனை செய்து பார்க்கக்கூட நம் கருத்துக்கு வலிமை இல்லை.

அருட் கண்ணைப் பெற்றவர்களுக்கு உலகம் முழுவதும் ஆண்டவன் உருவமாகத் தென்படும். அருட் கண் உடையவர்களுக்கு எல்லாம் நன்றாக இருக்கும். அவர்களுக்கு வருவன எல்லாம் நன்மைகளே என்பது அல்ல; அவர்களுக்கு வரும் தீமைகள் கூட நல்லனவாகவே தோற்றும்; நல்லனவாகவே மாறிவிடும் என்றுகூடச் சொல்லலாம். குணங்களிலே ஆண்டவனைக் கண்டு களிப்பதோடு குற்றங்களிலும் அவன் உருவத்தையே கண்டு களிப்பார்கள். "குற்றம் நீ குணங்கள் நீ கூடலால வாயிலாய்" என்று சம்பந்தர் பாடுகிறார். ரோஜாப் பூவைப் பார்க்கும் மரநூற் புலவன் அதன் முள்ளையும் அதன் அங்கமாகப் பார்க்கிறான். நமக்கோ முள்ளும் மலரும் ஒன்றற்கொன்று முரணானவையாகத் தோன்றுகின்றன.

உள்ளத்தே அருள் ஒளி பெற்றவருக்கு எல்லாம் ஒளி மயமாக, அருள் மயமாக, ஆண்டவன் மயமாக இருக்கும்.

நிழலைக் கண்டு பேய், பிசாசு என்று பயப்படுகிறவர்கள் உண்டு. நிழலையே அழகாகப் பார்க்கிறவர்கள் இருக்கிறார்கள். நிழலைத்தானே படம் பிடித்துப் போட்டோ ஆக்குகிறார்கள்? அது இருள் மயமான நிழல்தான். ஆனால் அதுவே உருவத்தைக் காட்டுகிறது. அப்படித்தான் மற்றவர்கள் அஞ்சும் இருளிலும் ஒளியைக் காணும் ஆற்றல் அருட் கண் உடையவர்களுக்கு அமைகிறது.

திருமூலர் சொல்வதை மறுபடியும் ஞாபகப்படுத்திக் கொள்ளலாம்.*

அருட்கண் இலாதார்க்கு
அரும்பொருள் தோன்றா;
அருட்கண் உளோர்க்கெதிர்
தோன்றும் அரனே;
இருட்கண்ணி னோர்க்கங்கு
இரவியும் தோன்றா;
தெருட்கண்ணி னோர்க்கெங்கும்
சீரொளி யாமே.

* திருவாவடுதுறையில் நடைபெற்ற திருமந்திர மகாநாட்டில் 2-2-54 அன்று பேசிய பேச்சின் ஒரு பகுதி.

# அண்ட லிங்கம்

சிவனடியார் ஒருவர் நாள்தோறும் தவருமல் சிவ பூசை செய்து வருகிருர். பூசைக்கு வேண்டிய பண்டங் களைப் பக்தியோடு சேகரித்து இலையும் மலரும் கொண்டு அருச்சித்துச் சிவபெருமானைத் துதித்து வழிபடுகிருர். பரம்பரையாக அவரது வீட்டில் பூசைக்கு உரிய மூர்த்தி கள் இருக்கின்றன. அவற்றில் தலைமையாக உள்ளது ஒரு சிறிய படிக லிங்கம். முறையாக அபிஷேகம் முதலிய வற்றைச் செய்வது அவர் வழக்கம்.

இதோ பூசை நடக்கிறது. படிகலிங்கத்தை நடுவிலே வைத்திருக்கிருர். அதற்கு அபிஷேகம் செய்ய ஒரு சிறிய கிண்ணத்தில் தண்ணீர். அதை எடுத்து விடுவதற்கு ஓர் உத்தரணி. அந்தச் சிவலிங்கப் பெருமானுக்குச் சாத்து வதற்கு ஒரு சிறிய பரிவட்டம். இடுவதற்குச் சிறிதளவு சந்தனம்.—இவற்றை அங்கே பார்க்கிருேம். சின்ன லிங்கத்திற்கு ஏற்றபடி எல்லாம் அளவிலே சிறியவையாக இருக்கின்றன.

திருக்கோயிலில் பூசை நடைபெறுகிறது. அங்கே எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்குக் குடங் குடமாக அபிஷேகம் செய்யவேண்டும். வீட்டில் உள்ள லிங்கத்திற்கு அபிஷேகம் செய்ய வைத்திருந்த நீரோ, சாத்துவதற்கு வைத்திருந்த பரிவட்டமோ இந்தப் பெருமானுக்கு போதுவ தில்லை. படிக லிங்கத்தைக் காட்டிலும் கோயிலில் உள்ள மூர்த்தி பெரியது. எல்லாக் கோயில்களிலும் கூட ஒரே அளவில் சிவபெருமான் இருப்பதில்லை. சிலதலங்களில்

பெரிய சிவலிங்கங்களைத் தரிசனம் செய்கிறோம். தஞ்சாவூர்ப் பெரிய கோயிலில் எழுந்தருளி இருக்கும் சிவலிங்க மூர்த்தி மிகப் பெரியவர். அதனால் அவருக்குப் பிருகதீசுவரர் என்று வடமொழியிலும் பெருவுடையார் என்று தமிழிலும் திருநாமங்கள் வழங்குகின்றன. கடல் கடந்து சென்று தன்னுடைய வீரத்தால் அங்கங்குள்ள அரசர்களை வெற்றி கொண்டு பேரரசனாக விளங்கிய ராஜராஜ சோழன் அந்தக் கோயிலைக் கட்டியிருக்கிறான். கோயிலுக் கேற்ற மூர்த்தி; மூர்த்திக் கேற்ற கோயில்.

அந்தப் பெரிய லிங்கத்திற்கு மற்றக் கோயில்களில் எழுந்தருளியிருக்கும் லிங்கங்களைப் போல அபிஷேகம் செய்தால் போதுமா? சிறிய பரிவட்டம் இருந்தால் போதுமா? மற்றத் தலத்து மூர்த்திகளுக்குக் கொப்பரையில் திருமஞ்சன நீர் நிரப்பிவைத்தால், பெருவுடையாருக்கு ஒரு குளத்தில் அல்லவா நீர் நிரப்பி வைக்க வேண்டும்? அதற்காகவே சிவகங்கைக் குளத்தை வெட்டியிருக்கிறார்கள்.

பிருகதீசுவரரை விடப் பெரிய திருவுருவம் படைத்த மூர்த்தியும் இருக்கிறார். கங்கை கொண்ட சோழபுரம் என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் சிவலிங்கப் பெருமான் மிக மிகப் பெரியவர். தஞ்சாவூர்க் கோயிலைக் கட்டின ராஜராஜன் மகனாகிய ராஜேந்திர சோழன் கங்கை கொண்ட சோழபுரத் திருக்கோயிலைக் கட்டினான். தந்தை கட்டிய கோயிலில் விளங்குபவர் பெருவுடையார் என்றால் மகன் கட்டிய கோயிலில் இருப்பவர் பெரும் பெருவுடையார் என்று சொல்ல வேண்டும். கங்கை கொண்ட சோழேசுவரர் என்பது அந்த மூர்த்தியின் திருநாமம். அந்தச் சிவலிங்கத்திற்கு அபிஷேகம் செய்வதற்காகச் சாரம் கட்டியிருக்கிறார்கள். அதன்மேல் ஏறிநின்றே அபிஷேகம் செய்யவேண்டும். ஒரு சிறிய செம்பில் தண்ணீர் மொண்டு

அங்கே அபிஷேகம் செய்தால் போதுமா? வீட்டில் உள்ள படிகலிங்கப் பெருமானுக்கு அபிஷேகம் செய்ய ஒரு சின்னக் கிண்ணத்தில் தண்ணீர் போதும்; திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் சிவலிங்கப் பெருமானுக்கு அபிஷேகம் செய்ய ஒரு குடத்தில் தண்ணீர் வேண்டும்; பெரிய கோயிலில் எழுந்தருளியிருக்கும் பெருவுடையாருக்கு அபிஷேகம் செய்ய ஒரு குளத்தில் தண்ணீர் வேண்டும். ஆனால் கங்கை கொண்ட சோழபுரத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவனுக்கு அபிஷேகம் செய்ய ஒரு குளத்து நீர் கூடப் போதாது; ஓர் ஏரியே வேண்டும் அல்லவா? அதற்காகத் தான் சோழ மன்னன் கங்கை கொண்ட சோழன் ஏரியை வெட்டினனே?

இப்படியாக, வீட்டில் உள்ள படிக லிங்கத்தையும், அதைவிடப் பெரிய திருக்கோயில் லிங்கத்தையும், அந்தக் கோயில் லிங்கங்களுக் குள்ளே பெரிய சிவலிங்கத்தையும் நாம் பார்க்கிறோம். நம்மைப் போலவே திருமூலதேவருங் கூட இந்த லிங்கங்களைப் பார்த்தார். இந்த லிங்கங்களை விடப் பெரிய லிங்கம் ஒன்றையும் அவர் பார்த்தார்.

அவர் பார்த்த அந்த லிங்கத்தை நாம் பார்க்கவில்லை. அவர் சொல்வதைக் கேட்டபிறகு நாம் பார்க்க முயற்சி செய்யலாம். நாம் பார்க்கும் லிங்கங்கள் யாவும் பிண்ட லிங்கங்கள். ஆனால் திருமூலர் கண்ட பெரிய லிங்கம் அண்டலிங்கம்



நாம் வீதிவழியே நடக்கிறோம். இருபுறமும் மூன்று நான்கு அடுக்கு மாடிகளை உடைய கட்டிடங்கள் இருக்கின்றன. அவற்றிற்குமேலே வானம் இருக்கிறது. வீதியிலே போகும் போது அண்ணாந்து பார்த்தால் வானம் தெரிகிறது; பந்தல் போட்டாற் போலத் தெரிகிறது. ஆனால் மாடிமீதே ஏறிப் பார்த்தால் வானம் பந்தலாகத்

தோன்றுவதில்லை. அதில் வளைவு தோன்றுகிறது. ஒரு மலையில் ஏறிப் பார்க்கிறோம். அப்போது வானம் பந்தலைப் போலத் தோன்றுவதில்லை. குவிந்த தோற்றத்தோடு காட்சி அளிக்கும். அதற்கு ஒரு விளிம்பு இருப்பதாகத் தோன்றுகிறது அந்த விளிம்பு தரையைத் தொட்டுக் கொண்டிருக்கிறது. அதைத் தொடுவானம் என்றும், வான விளிம்பு என்றும், வானவளையம் என்றும் (horizon) பெயரிட்டு வழங்குகிறார்கள். கண்ணுக்குக் கடல் தெரிந்தால் வான விளிம்பும் கடலைத் தொட்டு நிற்பதுபோல, அதற்குள்ளும் போவது போலத் தோன்றும்.

வானம் எல்லாப் பொருளையும் கவித்து விளங்க அதற்குள்ளே நம் காட்சிக்கு அகப்பட்ட அத்தனை பொருள்களும் இருக்கின்றன. முன்பு பந்தலாகத் தோன்றிய வானமா இது? ஆம், அதுவேதான். ஆனால் இப்போது இது வெட்டின அரை எலுமிச்சம் பழம்போல இருக்கிறது; தரையின் மீது கவிழ்க்கப்பட்ட அரிக்குஞ் சட்டியைப்போல, மரக்காலைப் போலக் காட்சியளிக்கிறது.

வானவிளிம்பு முழுவட்டம்; மேலே கவிழ்ந்த உருவம் அரைவட்டம். இந்தக் காட்சியிலே மனம் ஈடுபட்டு, "வான விளிம்பு எவ்வளவு அழகாக இருக்கிறது!" என்று நாம் சொல்வோம்.

அந்த வான விளிம்பைத் திருமூலதேவரும் பார்த்தார். பல பல சிவலிங்கங்களைப் பார்த்துப் பழகிய அவருடைய கண்கள் அந்தக் காட்சியிலே நின்று இன்புற்றன. "அடடா! இது வான் அல்ல. வீட்டிலும் கோயில்களிலும் பார்க்கும் இறைவனுகிய சிவலிங்கப்பெருமான் அன்றோ இங்கேயும் பெரிய உருவத்தில் காட்சி அளிக்கிறான்? இந்தப் பரந்த பூமியாகிய ஆவுடையாரின் மேலே வானுகிற லிங்கமன்றோ இருக்கிறது? வீட்டில் உள்ளது பிண்டலிங்கமானால் இது அண்டலிங்கம் அல்லவா?" என்று பரவசப் பட்டார்.

அந்த லிங்கத்துக்கு மானசிகமாகப் பூசை செய்யத் தொடங்கினார். இந்த அண்டலிங்கப் பெருமானுக்கு அபிஷேகம் செய்யவேண்டுமே; அதற்கு நீர் எங்கே என்று அவர் கண்கள் தேடுகின்றன. "அதோ, அதோ!" என்று கண்டு பிடித்துவிடுகின்றன. ஓவென்ற இரைச்சலோடு அலைகள் மேலும் கீழும் எழும்பி விழுந்து கரையிலே மோதும் கடல் அவர் கண் பார்க்கும் எல்லைக்குள் இருக்கிறது.

"அண்டலிங்கமாகக் காட்சியளிக்கும் சிவலிங்கப் பெருமானுக்கு அபிஷேகம் செய்வதற்காகவே தண்ணீரைத் தேக்கி வைத்துக்கொண்டிருக்கும் மஞ்சனசாலையல்லவா இந்த நீர்க்கடல்!" என்று வியந்தார். கிண்ணத்தில் நீர் எடுத்து அபிஷேகம் செய்வது முதல் ஏரியில் நீர் எடுத்து வந்து திருமஞ்சனமாட்டுவதுவரைக்கும் நாம் கண்டிருக் கிறோம். திருமூலரோ மிக மிகப் பெரிய சிவலிங்கத்தைக் கண்டார். அதற்கு அபிஷேகம் செய்வதற்குரிய திருமஞ்சன நீரையும் கண்டுவிட்டார். கிண்ணத்திலிருந்து உத்தரணி யில் எடுத்துப் படிக லிங்கத்துக்கு அபிஷேகம் செய்கிறோம். கொப்பரையிலிருந்து செம்பில் எடுத்து அபிஷேம் செய் கிறார்கள். குளத்திலிருந்தும் ஏரியிலிருந்தும் குடங்களில் நீர் எடுத்துப் பெரிய சிவலிங்கங்களுக்கு அபிஷேகம் செய் கிறார்கள். இந்த அண்டலிங்கத்துக்குக் கடல் நீரைச் செம்பிலும் குடத்திலும் மொண்டு நீராட்டினால் முடிகிற காரியமா? கடலில் இருக்கிற நீரை எப்படிக் கொண்டு போய் எப்படி அபிஷேகம் செய்வது? கங்கைகொண்ட சோழேசுவரருக்கே சாரம் போட்டு அபிஷேக நீரை மேலே கொண்டுபோய் விடுகிறார்கள். இந்த அண்டலிங்கேசுவர ருக்கு யார் எப்படிக்கொண்டுபோய் அபிஷேகம் செய்வது?

ஆனாலும் அந்த லிங்கத்துக்கு அபிஷேகம் நடக்கத் தான் நடக்கிறது. பூமியாகிய ஆவுடையாரின் மேல் உள்ள

வானமாகிய அண்டலிங்கத்துக்கு உரிய திருமஞ்சனமாகிய கடல் நீரை மேகங்கள் மொண்டு பொழிந்து அபிஷேகம் செய்கின்றன. அவை ஆழ்கடலிலிருந்து நீரை மொண்டு மொண்டு சென்று மழையாக அபிஷேகம் செய் கின்றனவாம்.

அபிஷேகம் ஆகிவிட்டது. மாலைபோட்டுப் பரிவட்டம் சாத்தவேண்டாமா? இந்த அண்டலிங்கப் பெருமானுக்கு வெள்ளை வெளேரென்று மல்லிகை மாலையைப் போல ஒரு மாலை இருக்கிறது. மல்லிகை மாலை என்றாலும் சரி, கண்ணைப் பறிக்கும் வைரமணிமாலை என்றாலும் சரி; வானத் தில் பளிச்சிடுகின்ற நட்சத்திரங்களின் வரிசைகள் அண்ட லிங்கத்தின் திருமேனிமேல் சாத்திய மாலைகள் அல்லவா?

இந்த லிங்கத்தைச் சுற்றியிருக்கும் ஆடை எது? உலக முழுவதையும் தனக்குள் அடக்கியிருக்கும் இந்தப் பெரு மானுக்குரிய இந்த லிங்க உருவத்தைச் சுற்றியிருப்பவை எட்டுத் திக்குகள். அவைகளே ஆடை.

இந்த ஆடையணிகளோடு அண்ட லிங்க தரிசனம் செய்தார் திருமூலர். தாம் பெற்ற இன்பத்தை நாமும் பெறவேண்டுமென்ற அருள் உள்ளத்தால் தாம் கண்டபடி காட்டுகிறார்.

**தரைஉற்ற சத்தி; தனிலிங்கம் விண்ணும்;**
**திரைபொரு நீர்க்கடல் மஞ்சன சாலை;**
**வரைதவழ் மஞ்சு நீர்; வான்உடு மாலை;**
**கரைஅற்ற நந்தி கலையும் திக்குஆமே.**

[சத்தி-ஆவுடையார். மஞ்சு-மேகம். உடு-நட்சத்திரம். நந்தி-சிவ **பெருமான். கலை-ஆடை.**]



திருமூலர் சொன்ன பிறகு நாம் சற்றே நிதானித்துப் பார்த்தால் நமக்கும் அவர் சொல்வது சரி என்றே படுகிறது. ஆனால் நமக்கு இது முதலில் தோன்றவில்லை. ஏன்? நமக்கு

நம்முடைய வாழ்க்கையில் எது அதிகமாக அடிபடுகிறதோ அதுதான் நினைவில் இருக்கிறது. அவருக்கோ எப்போதும் சிவபெருமானுடைய நினைவுதான். அவர் வீட்டிலே சிவலிங்க பூசை செய்தவர்; திருக்கோயிலுக்குச் சென்று சிவபூசையைக் கண்டு களித்தவர். வட கயிலையிலிருந்து புறப்பட்டு க்ஷேத்திரம் க்ஷேத்திரமாகப் பார்த்துக்கொண்டு வந்தவர். அவருக்கு உலகமே சிவமயமாகத் தோன்றும். வானையும் பூமியையும் ஒன்றாக நோக்கும்போது அவருக்குச் சிவலிங்க நினைவன்றி வேறு என்ன நினைவு உண்டாகும்?

இங்கே நடைபெறும் திருமந்திர மகாநாட்டுக்கு வந்து கலந்துகொண்டு இன்புற்றவர்கள் வெளியூருக்குப் போகிறார்கள். அங்கே ஓரிடத்தில் ஏதோ கூட்டம் நடக்கிறது. அதைக் கண்டு, "இங்கேயும் ஏதாவது மகாநாடு நடக்கிறதோ!" என்றுதான் முதலில் நினைப்பார்கள். காரணம் என்ன? அவர்கள் உள்ளத்தில் இந்தத் திருமந்திர மகாநாடு நன்றாகப் பதிந்துவிட்டது. இதைச் சார்பு நினைவுகள் (Association of ideas) என்று ஆங்கிலத்தில் சொல்வார்கள்.

திருமூலர் தம்முடைய சார்புக்கு ஏற்றவாறு வான் விளிம்பைக் கண்டு சிவபெருமானென்று கும்பிட்டார். அண்டலிங்கத்தைக் கண்ட ஆனந்தம் குமிழியிடச் சொல்லுகிறார். "அப்பா, நீ வீட்டில் படிக லிங்கத்தைப் பார்த்திருக்கிறாய் அல்லவா? சிவபெருமான் திருக்கோவில்களில் உள்ள பெரிய லிங்கங்களையும் தரிசித்திருப்பாயே! இதோ பார்; அவை எல்லாவற்றையும்விட இது பெரிய லிங்கம். இதற்கு அண்ட லிங்கம் என்று பெயர். பூமியாகிய ஆவுடையாரின் மேலே வானம் கவிந்து நின்று லிங்கமாக இருப்பதைக் கண்டுகொண்டு பார்" என்கிறார். "ஆவுடையார் சக்தி உருவம். இந்தத் தரைதான் எம்பெருமான்

உற்ற சக்தியாகிய ஆவுடையார். ஒரே அகண்டமாக வேறு இணையே இல்லாமல் உள்ள வானந்தான் தனி லிங்கம்" என்று விளக்குகிறார்.

தரைஉற்ற சக்தி;
தனிலிங்கம் விண்ஆம்.

"இந்தப் பிரம்மாண்டமான லிங்கத்துக்கு அபிஷேகம் செய்யவேண்டுமானால் நீருக்கு எங்கே போவது என்று கவலைப்படாதே. திரைபொரு நீர்க்கடல் இருக்கிறது. அதுதான் திருமஞ்சன நீரைப் பூரித்து வைத்திருக்கும் இடம்" என்று காட்டுகிறார்.

திரைபொரு நீர்க்கடல் மஞ்சன சாலை.

"எப்படிக் கடலிலிருந்து நீரை மொண்டு அபிஷேகம் செய்வது என்ற கவலையும் உனக்கு வேண்டாம். மலையின் மேலே தவழ்ந்துகொண்டிருக்கும் மேகம் அந்தக் கவலையைப் போக்கிவிடும். கடலிலிருந்து மொண்டு வந்து மழையாகப் பொழிந்துவிடும்."

வரைதவழ் மஞ்சு நீர்.

"இந்தப் பெரிய லிங்கத்துக்கு எங்கே முழம் போட்டு ஆடையை வாங்குவது? உலகத்தையே சுற்றிக் கட்டும் அளவில் அல்லவா ஆடை வேண்டும்?" இப்படி எண்ணு கிறாய் அல்லவா? உலகத்தையே சுற்றும் ஆடை உண்டு. எட்டுத்திக்குகளும் உலகின் சுற்றுப் புறங்களாக இருக்கின் றன. வெட்டவெளியாய் மாசு மறுவின்றி இருக்கும் இந்த ஆடைதான் இந்த அண்ட லிங்கேசனுக்கு ஆடை அப்பா.

வான் உடு மாலை;
கறையற்ற நந்தி கலையும்திக்கு ஆமே.



இந்த அண்டலிங்கத்தை நினைப்பூட்டவே பிண்ட லிங்கங்கள் இருக்கின்றன. திருமூலரைப் போன்ற பெரியு

வர்கள் அண்டலிங்கத்தைக் கண்டார்கள். அதை அப்படியே காட்டினால் நம் போன்றவர்கள் அதன் அருமையைத் தெரிந்து கொள்ள முடியாது என்று கருதி முதலில் நமக்குப் பிண்டலிங்கத்தையே காட்டினார்கள்.

இறைவன் திருவருளால் அவனைக் கண்டு இன்புற்ற பெரியவர்கள் பிறருக்கு அக்காட்சியைக் காட்ட விரும்பினார்கள். ஆனால் அவர்கள் எத்தனை காலம் சிரமப்பட்டு அந்தக் காட்சியைக் கண்டிருக்கவேண்டும்! அந்தச் சிரமத்தில் ஓரளவாவது படாமல் எளிதிலே நாம் கண்டு விடலாம் என்றால் அது நடக்கிற காரியமா? அதற்கு என்று ஒரு தகுதி வேண்டும். அந்தத் தகுதி இல்லா விட்டால் பெரியவர்கள் காட்டினாலும் நம்மால் காணமுடியாது.

ஒரு பாட்டி சின்னஞ் சிறு கிண்ணத்தில் சோற்றை எடுத்து வெண்ணெயைப் போலப் பிசைந்து குழந்தைக்கு ஊட்டுகிறாள். வீதியில் உள்ள மரத்தையும் மாட்டையும் வண்டியையும் காட்டிக் காட்டிச் சின்னச் சின்ன உருண்டையாக ஊட்டுகிறாள். கிண்ணத்தோடே வைத்து, "இந்தா சாதம்!" என்றால் குழந்தையால் சாப்பிட முடியுமா? அது உணவை வீணாக்கிவிடும். சாப்பிட மாட்டேன் என்று அழக்கூட ஆரம்பிக்கும். அவ்வாறே ஈசனிடம் நேரே அழைத்துப் போகும் ஆற்றல் பெரியவர்களுக்கு இருந்தாலும் நாம் அவனைக் கண் கொண்டு பார்க்கவேண்டுமே! நமக்குத்தான் எத்தனையோ பிறவிகளில் ஏறி மண்டிக் கிடக்கும் மாசு நம் கருத்திலும் கண்ணிலும் படர்ந்திருக்கிறதே! ஆகையால் நமக்கு இறைவனைக் காட்டினாலும் காணும் தகுதி இல்லை; நமக்கும் காட்டும் பெரியவருக்கும் இறைவனுக்கும் பழியை உண்டாக்குவோம். ஆன்ம வளர்ச்சியில் நாம் இன்னும் குழந்தைப் பிராயத்தில் தான் இருக்கிறோம். ஆதலால் மிக மிக உயர்ந்த அநுபவ நிலையை நமக்குச் சொன்னால் விளங்காது என்று நினைத்த பெரியவர்கள்

இறைவனிடம் நம்மைப் படிப்படியாக அழைத்துச் செல்கிறார்கள். முதலில் பிண்டலிங்கத்தைக் காட்டிப் பிறகு அண்டலிங்கத்தைக் காட்டி அப்பால் இறைவனுடைய அருளமுதக்கடலிலே புகும் வழியையும் காட்டுகிறார்கள். பிண்டலிங்க தரிசனத்தினால் நம்மிடம் பக்தி முறுகுகின்றது. பிறகு அண்டலிங்க தரிசனம் செய்கிறோம். உருவம் இல்லாமல் இருப்பினும் உருவம் உடையவனாகத் தோற்றும் இறைவனை அடைய வேண்டும் என்ற வேட்கை நாளடைவில் எழும்பி வலிமை அடைகிறது.

இறைவனை அண்டலிங்கமாகக் கண்டவர்களே பிண்டலிங்கமாகிய அருட்குறியை நமக்குக் காட்டியிருக்கிறார்கள். அருளை யுணர்ந்து அதன் அடையாளமாகிய குறியை நாம் இந்த நிலையில் கண்டு இன்புறக் காட்டினார்கள்.

இதற்கும் இறைவனுக்கும் தொடர்பு இல்லை என்று சொல்லலாமா? மணப்பருவம் அடைந்த கட்டிளங்காளை ஒருவன் தமிழ் நாட்டில் ஓர் ஊரில் இருக்கிறான். பருவம் வந்த அழகிய மட மங்கை ஒருத்தி காசியில் இருக்கிறாள். இருவருக்கும் திருமணம் செய்யலாம் என்று ஏற்பாடு செய்கிறார்கள். மணமகன் பெண்ணைப் பார்த்ததில்லை. "பெண் அழகுள்ளவளாக இருப்பாளா? அல்லது சப்பை மூக்கும் எலிக்கண்ணும் உடையவளாக இருப்பாளோ?" என்ற சந்தேகம் உண்டாயிற்று. காசிக்கு அவனை அழைத்துப் போவதற்கு எத்தனை செலவாகும்? பெண்ணைக் கண்டால் அவன் கல்யாணம் செய்து கொள்வான் என்ற உறுதி ஏற்படுவதற்குமுன் இந்தச் செலவைப் பெண் வீட்டுக்காரர்கள் ஏற்றுக் கொள்வார்களா? அதற்காக ஒரு காரியம் செய்கிறார்கள். பெண்ணின் போட்டோவை எடுத்து அனுப்புகிறார்கள். அதைப் பையன் பார்க்கிறான். 'மூக்கும் முழியு' மாக அந்த மங்கை இருப்பதைக் காண்

கிறன். அவள் நிறம் சிவப்பு என்று சொல்லுகிறார்கள். அவனுக்கு உள்ளத்தே காதல் பிறக்கிறது. "இப்போதே காசிக்குப் போகமாட்டோமா?" என்று நினைக்கிறான். நினைப்பானோ, நினைக்க மாட்டானோ நீங்களே சொல்லுங்கள்.

அவன் அந்தப் பெண்ணை நேரில் பார்க்க வில்லை. அவன் பார்த்தது படந்தான். ஆனாலும் பெண்ணைப் பற்றிய கற்பனையை அவன் உள்ளத்தே வளர்க்க அந்தப் படம் ஒரு பற்றுக் கோடாகி விட்டது. படத்தைப் பார்த்து மனம் ஈடுபட்டு அப்பால் பெண்ணைப் பார்க்கப் போகிறான். "இது அந்தப் பெண்ணின் படம் அன்று" என்று அவன் சொல்வானா? அவன் பெண்ணைப் பார்க்க வில்லை. ஆனால் அந்தப் படம் எப்படி வந்தது? முதலில் பெண்ணைப் பார்த்தவன் ஒருவன் படம் எடுத்தான். இப் போது இந்த மணமகன் படத்தை முதலில் கண்டு, பிறகு பெண்ணைக் காணப் போகிறான். தான் நேரிலே பார்க்க வில்லை என்பதற்காக அந்த நிழற்படம் பொய் என்று சொல்லலாமா? அந்தப் பெண்ணைத் தனக்கு உரியவளாக ஆக்கிக் கொள்வதற்கு முன் பெண்ணின் உருவத்தைப் பார்த்து மனம் ஈடுபடுவதில் தவறு என்ன இருக்கிறது?

அதைப் போலவேதான் ஆண்டவனைக் கண்ட அநு பூதிமான்களாகிய பெரியவர்கள் அவன் உருவத்தைப் போட்டோப் பிடித்து நமக்குத் தந்தார்கள். அண்டலிங் கத்தைக் கண்டு பிண்டலிங்கத்தைத் தந்தார்கள். நாம் அதை அன்புடனும் ஆர்வத்துடனும் தரிசித்துத் தக்கபடி முயன்றால் மூலப்பொருளையே கண்டு இன்பத்தை அடை யலாம்.

அவ்வாறு செய்யாமல் பிண்டலிங்கமே பொய் என்றால், மணம் செய்து கொள்ள விரும்பும் பையன் போட்டோ விலுள்ள பெண்ணே இல்லை, பொய் என்று சொல்வது போலத்தானே ஆகும்? நிழற்படம் இருப்பதனால் அதற்

குரிய பெண் இருப்பது மெய். அந்தப் படத்தைப் பிடித்தவன் ஒருவன் அவளைப் பார்த்திருக்கிறான் என்பதும் உண்மை. அவ்வாறே ஆண்டவன் இருப்பது மெய். அவனைக் கண்டு உணர்ந்தவர்கள் நமக்குச் சொல்வனவும் காட்டுவனவும் மெய்யே.

பிண்டலிங்கத்தைக் கண்ணாலே கண்ட நமக்கு அண்டலிங்கத்தையும் காட்டுகிறார் திருமூலர். கண்ணாலே காணும் எல்லாப் பொருளையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கிறது இந்த அண்டலிங்கம். வானம், பூமி, திசை இவற்றுக்குள் அடங்காத பொருளாக நாம் எதைப் பார்க்க முடியும்? இந்த லிங்கத்தைக் கண்டு களித்தால் மேலே எல்லாத் தத்துவங்களையும் தன்னுள் அடக்கிய இறைவனை அகக்கண்ணால் காணும் நிலை உண்டாகும்.

அவர் கூறும் அண்ட லிங்கம் எத்தனை அழகாக இருக்கிறது!

*தரைஉற்ற சத்தி; தனிலிங்கம் விண்ஆம்;*
*திரைபொரு நீர்க்கடல் மஞ்சன சாலை;*
*வரைதவழ் மஞ்சுநீர்; வான்உடு மாலை;*
*கரைஅற்ற நந்தி கலையும்திக்கு ஆமே.* *

---

* திருவாவடுதுறையாதீன மடாலயத்தில் 2-2-54 அன்று ஆற்றிய சொற்பொழிவின் ஒரு பகுதி இது.

# ஒரு வரம்

நல்ல நிலா, பால்போல வீசுகிறது; அது உலகத்துப் பொருள்களுக்கெல்லாம் புதிய மெருகை ஏற்றி, முள் ளானாலும் கல் ஆனாலும் பார்த்துக் களிக்கும் தோற்றத் தைத் தந்து களியூட்டுகின்றது. குழந்தைகள் 'நிலா நிலா வா வா!' என்று குதித்து விளையாடுகின்றன. வயசுமிக்க வர்கள் வீட்டுக்கு வெளியே அமர்ந்து பழங் கதை பேசிக் கொண்டிருக்கிறார்கள். நிலா முற்றத்தில் மனம் ஒத்த காதலர்கள் மதியின் அமுத கிரணத்தால் புதிய இன்பம் பெற்றுத் திகழ்கின்றனர்.

இப்படி யாவரும் இன்பக் கடலில் மூழ்கியிருக்கும் போது ஒரு காரிகை மட்டும் வேதனைப்படுகிறாள். நிலவின் கதிர் அவளுக்குத் தீக்கதிராக இருக்கிறது. அவள் தன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட காதலனை அடையாமல் வெதும்புகிறாள். உலக வாழ்வே அவளுக்கு இன்பமாக இல்லை. ஊண் சுவையாக இருக்கவில்லை. அமுதமும் கசக்கும் நிலை அவள் நிலை.

பகல் நேரத்தில் ஏதோ வீட்டு வேலையைச் செய்து ஒரு வாறு இந்தக் காதல் நோயின் வேகத்தை மிகுதியாக உண ராமல் பொழுதுபோக்கினாள். மாலை வந்ததோ இல்லையோ, காலன் முன் நிற்கும் உயிர்போலத் துடிக்கிறாள்.

> **"காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி**
> **மாலை மலரும்இந் நோய்"**

என்று வள்ளுவர் கூறும் நோய் அவளிடம் மலர்ந்துவிடு கிறது. மாலை போதாதென்று சந்திரன் வேறு உதயமாகி

விட்டான். அவன் மற்றவர்களுக்கெல்லாம் அமுதகிரணன். இவளுக்கோ நச்சுக் கதிரவனாக இருக்கிறான்.

இந்த இளைய நங்கை நிலைவைக் கண்டு படாத பாடு படுவதை அவளுடைய உயிர்த் தோழி கவனித்தாள். காதலியின் உள்ளத்தை இழுத்த ஆடவன் யார் என்ற ஆராய்ச்சி தோழிக்குப் பிறந்தது. அவள் அந்த இரகசியத்தை அறிந்துகொண்டாள். சீகாழியிலே எழுந்தருளியிருக்கும் தோணியப்பனிடந்தான் அவள் காதல் கொண்டிருக்கிறாள். சீகாழிக்குக் கொச்சைவயம் என்பது ஒரு திரு நாமம்; கொச்சை என்று சுருக்கிச் சொல்வதும் உண்டு.

கொச்சையில் உள்ள பெருமானிடம் காதல் பூண்ட அந்த மடமங்கை அவனை அணுகித் தன் வேட்கையைச் சொல்லவோ, அவனைப் பிறர் மூலமாக அடையவோ முடியாமல் தவிக்கிறாள். அவளுடைய காதலைக் கொச்சைப் பெருமானுக்கு வேறு யாராவது சொல்லி அவனுடைய அருளுக்கு அவளை ஆளாக்கினால் அவள் துன்பம் தீரும். முதலில் அந்தப் பெண்ணின் கருத்தை உணர்ந்து அவள் யாரிடம் காதல் கொண்டிருக்கிறாள் என்ற இரகசியத்தைத் தெரிந்துகொள்வதற்கே ஆள் இல்லையே!

ஆருயிர்த் தோழி தன்னால் இயன்ற உதவியைச் செய்ய எண்ணினாள். கொச்சைப் பிரானிடம் தானே சென்று அவனுடைய உடன்பாட்டைப் பெற்று வரலாம் என்று துணிந்தாள். அப்பெருமானிடம் யார் யாரோ அன்பு பூண்டு வேண்டிய வரங்களையெல்லாம் பெற்று இன்புறுகிறார்கள் என்ற செய்தி அவள் காதில் பல காலமாக விழுந்ததுண்டு. "நாமும் ஒரு வரம் வாங்கிக்கொண்டு வரலாம். இந்தப் பெண்ணை ஆட்கொள்ளவேண்டுமென்று கெஞ்சியாவது கேட்டு வரலாம்" என்று எண்ணிப் புறப்பட்டாள்.

தோணியப்பனிடம் வந்தாள். எத்தனையோ பேர்கள் அவனுடைய கோயில் வாயிலில் காத்துக் கிடந்தார்கள். அவர்கள் தங்கள் குறைகளை இறைவனிடம் கூறி வரம் வாங்கிக்கொண்டு சென்றார்கள். அன்பர்கள் வரும் போது வாடிய முகத்துடன் வருவதையும், போகும் போது பொலிவுபெற்ற முகத்தோடு போவதையும் பார்த்துத் தன் காரியம் வெற்றியடையும் என்ற நம்பிக்கை தோழிக்கு உண்டாயிற்று. 'கூட்டம் எல்லாம் போகட்டும். நாம் மிகவும் இரகசியமான செய்தியை அல்லவா சொல்லப் போகிறோம்? தனிமையிலே கண்டு சொல்வதுதான் முறை" என்று அவள் காத்திருந்தாள். எல்லோரும் போன பிறகு அவள் சீகாழிப் பெருமான் கோயிலுக்குள் நுழைந்தாள்.

அருள் கொப்புளிக்கும் கண்ணையுடைய ஆண்டவன் அவளைக் கண்டவுடன், "உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டான்.

"எனக்கு ஒரு வரம் வேண்டும்" என்று ஆரம்பித்தாள் தோழி. தன் தலைவியை ஏற்றருள வேண்டும் என்று சொல்ல எண்ணியே இதை ஆரம்பித்தாள். பெரிய திருவுருவமுடையவர் தோணியப்பர். தோழி, போனவுடன் அவர் திருவுருவம் முற்றும் பார்ப்பதற்கு முன்பே, "எனக்கு ஒரு வரம் வேண்டும்" என்றாள்.

அதற்குள் அவள் கண்கள் மெல்ல அவர் திருமேனியைப் பார்த்தன. "வந்தது அபாயம்!" என்று துணுக்குற்றாள் அவள். அந்தப் பெருமானைத் தனியே பார்க்க வேண்டுமென்று எண்ணி வந்தவள் அவள். இங்கே எம் பெருமானுடைய பாகத்தில் பேரழகியாகிய உமாதேவி வீற்றிருந்தாள். தோணியப்பனுக்கு உமாபாகன் என்ற பெயர் உண்டு. 'நம்முடைய காரியம் பலிக்காது. நாம் சொல்லவேண்டியதைக்கூடச் சொல்ல முடியாதுபோல் இருக்கிறதே!" என்று சற்றே அவள் ஒன்றும் பேச முடி-

யாமல் நின்றாள். "என்ன அம்மா உனக்கு வேண்டும்? அஞ்சாமல் சொல்!" என்று உமாபாகன் திருவாய் மலர்ந் தருளினான்.

அவள் சிறிது உணர்வு பெற்றுத் தலையை நிமிர்ந்து பார்த்தாள். இறைவன் திருமுடியளவும் அவள் கண்கள் வட்டமிட்டன. அப்போதும் அவள் திடுக்குற்றாள். ஆம்; அப்பெருமான் திருமுடியில் உள்ள பிறையைக் கண் டாளோ இல்லையோ, "அட! இங்கும் இந்தச் சனியன் இருக்கிறதா?" என்று பயந்தாள். சந்திரனால் தன் தலைவி படும் வேதனையைக் கண்டு மனம் மறுகித்தானே அவள் இங்கே வந்தாள்? இங்கும் அந்தப் பாழும் சந்திரன் இருக் கிறதே! இறைவன் அதைத் தன் தலையில் அல்லவா தூக்கி வைத்துக்கொண்டிருக்கிறான்? என்ன அநியாயம் இது?—

இப்போது தோழிக்கு வேறு ஓர் எண்ணம் தோன்றி யது. 'என் தலைவிக்கு இவர் அருள் செய்வதைப் பின்பு பார்த்துக்கொள்ளலாம். அதைச் சொல்ல இது சமயம் அன்று. நயம் திகழும் குங்குமக் குழம்பணிந்த கொங்கை யழகியாகிய தேவி அருகில் இருக்கிறாள். ஆகையால் இப்போது மற்றொரு காரியத்தையாவது சாதித்துக்கொள்ள லாம். இந்தச் சந்திரனைத் தொலைக்க வழி தேடலாம்' என்று தோன்றிற்று.

"என்ன பெண்ணே, தடுமாறுகிறாய்?" என்று மறுபடி யும் கொச்சைப் பெருமானிடமிருந்து அன்புக் குரல் எழுந்தது.

மறுபடியும் அவள் தன் கண்ணை அப்பெருமான் மேல் ஓட்டினாள். இறைவனுடைய சடாபாரத்துக்குள் ஒளிந் திருந்த பாம்பு சற்றே தலை நீட்டியது. மற்றச் சமயங்களில் பாம்பைக் கண்டு அஞ்சும் தோழி இப்போது பேருவகை

கொண்டாள். 'நமக்கு இவர் வேறு வரம் தருவது கிடக்கட்டும். இப்போது இந்தச் சந்திரனை ஒழித்துக் கட்டும் வரம் தரட்டும். சந்திரனை எடுத்து விழுங்கும் அரவும் பக்கத்தில் இருக்கிறது. பெரிய பாம்பாகவே இருக்கிறது. உயிரை வாங்கும் அரவாகிய இது, நம்முடைய தலைவியின் உயிரை வாங்கும் திங்களை உண்டு அதன் உயிரை வாங்கட்டும்' என்று அவள் கற்பனை விரிந்தது. கொஞ்சம் தைரியமாகவே பேசலானாள்.

"சுவாமி, கொச்சையில் உள்ள பெருமானே! அழகான தேவியை இடப் பாகத்திலே வைத்திருக்கும் உமாபாகரே! உம்மிடத்தில் ஒரு வரத்தை யாசிக்கிறேன். அதை நீர் தர வேண்டும். அது கொடுப்பதற்கு அரிய வரம் அன்று. மிகவும் எளிதிலே முடியக் கூடியது. அதற்கு ஏற்ற சந்தர்ப்பம் இது. உம்முடைய தலையில் இருந்து சிமிட்டுகிறதே இந்தப் பிறை, இது சாமானியமானதன்று. இது எவ்வளவோ பேருக்குத் துன்பத்தை உண்டாக்குகிறது. இதன் பக்கத்தில் அதோ பெரிய பாம்பு புஸ் புஸ் என்று மூச்சு வாங்குகிறதே! அதற்கு நல்ல பசி போலிருக்கிறது. இந்தப் பாழும் பிறையை அந்தப் பாம்புக்கு இரையாக அளித்துவிடும். அதற்கு இருக்கும் பெரிய பசி போகும். உமக்கும் தலைப் பாரம் குறையும். மான்போல மெல்லிய பெண் ஒருத்தி எங்கள் வீட்டில் இருக்கிறாள். அவள் இந்தப் பிறையாலே படுகிறபாடு கொஞ்ச நஞ்சம் அல்ல. அவள் உயிரைத் தினந்தோறும் இது கொல்லாமல் கொல்லுகிறது. அவளும் உயிர் பிழைப்பாள். இந்தச் சிறிய காரியத்தைத்தான் தேவரீரிடம் நான் கெஞ்சிக் கேட்கிறேன்."

உடன் இருக்கிற அம்பிகையையும் அவள் கொஞ்சம் புகழ்ந்து வைத்தாள். "நயந்திகழ் குங்குமக் கொங்கையையுடைய உமாதேவியின் பாகத்தையுடைய பெருமானே!" என்று அவனை அழைக்கும்போதே அந்தப் புகழையும்

சேர்த்தாள். அம்பிகை மனம் குளிர்ந்தால் தோழி நினைத்த காரியம் எளிதிலே கைகூடும் அல்லவா?

தோழி கூறிய விண்ணப்பத்தைப் பின்வரும் பாடல் தெரிவிக்கிறது.

நமக்கின்று ஒருவரம் நீர்தர வேண்டும்;
  நயம்திகழ்குங்
குமக்கொங்கை பாகத்துக் கொச்சைஉள்
  ளீர், கொடும் கோளரவுக்கு
இமைக்கும் பிறையை அளித்தால், அதற்கும்
  இரும்பசிபோம்;
உமக்கும் தலைச்சுமை போம்; எங்கள்
  மானும் உயிர்பெறுமே.

[நயம் - அழகு. குங்குமம் - சந்தனம் குங்குமப்பூ முதலியவை கலந்த கலவை ஆகிய குழம்பு. குங்குமக் கொங்கை என்பது அதனை உடைய அம்பிகையைக் குறித்தது; அன்மொழித் தொகை. கொச்சை - சீகாழி. கோள் - கொலை. இமைக்கும் - ஒளிவிடும். இரும்பசி - பெரும்பசி. எங்கள் மான் என்றது தலைவியை. உயிர் பெறும் - உயிரைப் பெறுவாள்.]

இந்தப் பாடலைப் பாடினவர் பலபட்டடைச் சொக்கநாதப் புலவர்.

# கங்காதரன்

"சிவனென்னும் பெயர் தனக்கே உடைய செம்மேனி அம்மான்" என்று அப்பர் சுவாமிகள் சிவபெருமானைப் பாடுவார். சிவம் என்ற சொல் மங்களம் என்னும் பொருளை உடையது. எப்போதும் மங்களத்தைத் தருபவனாகவும் மங்களமே உருவாய் அமைந்தவனாகவும் இருப்பவன் சிவபெருமான். 'சாந்தம் சிவம் அத்வைதம்' என்ற மறைமொழி சிவபரம்பொருளின் நிலையை விளக்குகிறது.

உலகியலிலே சிக்கி அல்லற்படும் மனிதனுக்குச் சுகத்தைத் தருவது அமைதி. தூங்கும்போது அமைதி உண்டாவதால், "சுகமாகத் தூங்கினேன்" என்று சொல்கிறான். சாந்தியின் சுவையை ஒரு துளி தூக்கத்தில் உணரக் கொடுத்து வைத்தவன் மனிதன்.

மனம் தொழிலற்று ஓய்ந்து நிற்கும் நிலையில் இன்பம் உண்டாகிறது. இந்த நிலையைச் சுஷுப்தி அவஸ்தை என்று சொல்வார்கள். தூங்கும்போது கனவு தோன்றினால் அப்போது இன்பம் உண்டாவதில்லை. கனவில்லாத அமைதியான சுழுத்தி நிலையே சாந்தியைத் தருகிறது; இன்பத்தைத் தருகிறது. அப்போது மனம் விளையாடி அலுத்துப்போன குழந்தையைப்போலத் தூங்குகிறது. ஆனால் அந்தத் தூக்கம் சிறிது நேரத்துக்குத்தான். மறுபடியும் அது விழித்துக்கொண்டு அலையத் தொடங்கி விடுகிறது.

இவ்வாறு இன்றிப் பகலிலும் மனம் ஓய்வு பெற்று இருந்தால் இன்பம் உண்டாகும். விழித்திருக்கும்போதே மனம் இயங்காமல் இருப்பதையே, 'தூங்காத் தூக்கம்'

என்று சொல்வார்கள். இது எளிதில் வருவது அன்று. பல காலமாக முயன்று சாதனை செய்தபிறகு இறைவன் திருவருள் கைகூடும்பொழுது அது உண்டாகும்.

மனம் இயங்காமல் நிற்பதற்கு முன் அது ஓடாமல் நிற்கவேண்டும். ஒவ்வொரு கணமும் மனம் ஓடிக்கொண்டே இருக்கிறது. ஒரு கணத்தில் அது நினைக்கின்ற நினைப்புக்கு அளவே இல்லை. ஒரு பொருளையே நினைத்து ஒருமைப் படுவது என்பது அதற்கு வழக்கம் இல்லை. சதா துறு துறு வென்று இருக்கும் குரங்குபோன்றது அது. அதை ஓரிடத் தில் நிறுத்தி வைப்பதென்பதே மிகமிகக் கடினமான காரியம். இந்த ஒருமைப்பாட்டைத்தான் தாரணை என்று சொல்வார்கள்.

நமக்கு மிகவும் விருப்பம் உள்ள ஒருவர் இருக்கிறார். அவரை ஒரு கணம் அவர் இல்லாத இடத்தில் நினைத்துப் பார்த்தால்கூட மனம் ஒரே நிலையில் இருப்பதில்லை. தன் காதலியிடம் அளவற்ற காதல் கொண்டவன் அவளைப் பிரிந்திருக்கும்போது அவளை நினைக்கிறான். அவளை நினைக்கிறானே யன்றி அவளை முழுவதும் ஒருமைப் பாட்டு டன் நினைக்க முடிவதில்லை. நடு நடுவில் வேறு நினைவு களும் வந்து குறுக்கிடுகின்றன. அவளையே நினைத்துக் கொண்டிருக்கிறான் என்று சொல்கிறோமே, அதற்குக் காரணம் என்ன, தெரியுமா? வேறு பல நினைவுகள் எழுந் தாலும் அவற்றை உடனுக்குடன் உதறி விட்டு மீட்டும் மீட்டும் அவள் நினைவையே கொண்டு வருகிறான். தொட்ட தொட்ட பொருள்களின்மேல் நினைவை ஓட விட்டு எதிலும் தொடர்ந்த நினைவின்றி இருக்கும் நிலைக்கு இந்த நிலை வேறு பட்டது. இடையிடையே வேறு நினைவுகள் வந்தாலும் மறுபடியும் மறுபடியும் மூல நினைவைத் தொட்டுக் கொள்ளும் நிலை இது. அந்த நிலையிலும் எவ் வளவு காதலையுடைய காதலி ஆனாலும் அவளுடைய உரு

வத்தைத் தெளிவாகக் காண முடிவதில்லை. ஆயினும் பல பல நினைவுகளிலே மிதப்பதை விட ஒரே நினைவை அடிக் கடி ஒட்டிக்கொண்டு நினைப்பது சிறந்தது. மனத்தின் வேகம் அப்போது குறைகிறது.

பல பலவற்றை நினைக்கும் மனத்தின் வேகத்தைக் குறைத்துப் பலவற்றை நினைக்கும் நினைவுகளுக்கிடையே ஒரு பொருளை அடுத்தடுத்து நினைப்பது மனத்தைப் பண் படுத்தும் முயற்சியில் முதல் நிலை. அந்த மூல நினைவுக்குக் குறுக்கே எழும் வேறு நினைவுகளைக் குறைத்துக் கொள்ளு வது அடுத்த நிலை. அவை முற்றும் குறைய ஒன்றே நினைந்திருத்தல் மூன்றாவது நிலை. அந்த ஒன்றை நினைக்கும் போது மனம் ஒருமுகப்படுகிறது. அதை மனோலயம் என்று சொல்வார்கள்.

இந்த மனோலயம் ஒருவனுக்குக் கிடைத்தாலே முக்தி யின் எல்லையைத் தொட்டவனாகி விடுகிறான். இது முறுக முறுக இறைவனுடைய புணர்ப்பு அவன்பால் மிகுதி யாகிறது. எத்தனைக்கு எத்தனை அதிக நேரம் மனம் நிற்கப் பயில்கிறானோ அத்தனைக்கு அத்தனை அவன் கவலை களினின்றும் மாயைச் சூழலினின்றும் விடுபட்டு நிற்கிறான்.

மனம் ஒருமுகப் படப்பட எல்லாவற்றையும் மறந்து தூங்காமல் தூங்கும் நிலை வரும். அந்த நிலையையே சமாதி என்று சொல்வார்கள். அதிலும் மூன்று வகை உண்டு. ஸவிகற்ப சமாதி, நிர்விகற்ப சமாதி, ஸகஜ சமாதி என்பார்கள். அவ்வப்போது மனம் உறங்குதலும் தடை நேருமானால் விழிப்பதும் ஸவிகற்ப சமாதி. நெடு நேரம் மனம் உறங்க எந்தத் தடையாலும் உறக்கத்துக்குக் கேடு வராமல் இருப்பது நிர்விகற்ப சமாதி.

நிர்விகற்ப சமாதி கை கூடி மனம் தூங்கப் பழகின பிறகு, தூங்கித் தூங்கி மனம் தன் வலிமையை இழந்து

விடும். அது இருந்தும் இல்லாததற்குச் சமானமாகி விடும். அப்போது செயலின்றி இருக்க வேண்டும் என்ற நியதி இல்லாமல், நின்றாலும் இருந்தாலும் கிடந்தாலும் சமாதி நிலையில் உண்டாகும் இன்பம் அலையாமல் தொடர்ச்சியாக இருந்து கொண்டே இருக்கும். இதைச் சகஜ சமாதி என்பார்கள். இந்த நிலையில் இருப்பவர்கள் பேசினாலும் மௌனிகள்; விழித்திருந்தாலும் குருடர்கள்; பல செயல் கள் செய்தாலும் செயலற்றவர்கள்.

அவர்களை ஜீவன் முக்தர்கள் என்று சொல்வார்கள். இவ்வுலகத்தில் உடம்போடு இருந்தபடியே முக்தியின் பத்தை நுகர்பவர்கள் அவர்கள். அவர்களே சிவம்; அவர்களே சாந்தத்தின் உரு; அவர்கள் அத்வைத நிலையில் இருப்பவர்கள்.

இத்தகைய உபசாந்த நிலையைத் தரும் கருணை யாளன் சிவபெருமான். வேகமாக ஓடிக் கொண்டிருக்கும் மனத்தின் வேகத்தைக் கெடுத்து ஆட்கொள்ளும் விமலன் அவன். "வேகம் கெடுத்தாண்ட வேந்தன் அடிவெல்க" என்று பாடுகிறார் மணிவாசகப் பெருமான்.

ஓடும் மனத்தை அமைதியின்பாற் செலுத்தும் முயற்சிக்குச் சிவபெருமானுடைய திருவருள் துணை யிருந்தால் எளிதிலே சாந்தி பிறக்கும்.

இறைவன் கங்காதரனாக இருக்கும் திருக்கோலம் இந்த உண்மையை விளக்குகிறது. வானில் உலாவிய கங்கை ஓங்கி எழுந்து ஆலிக்கும் அலைகளை உடையது. என்னைத் தாங்குவார் யார் என்ற அகங்காரத்தோடு இருந் தது. அதைத் தன்னுடைய சடை ஒன்றிலே இறைவன் ஏற்றுக் கொண்டான். வானுலகமும் மண்ணுலகமும் கிடுகிடாய்க்க ஆரவாரம் செய்துகொண்டு வந்த கங்கை இறைவன் சடையிலே அடங்கி ஒடுங்கி நின்றது. குடத்துக்

குள் அடங்கியது போல் அது அடங்கியது. இதைக் காள மேகப் புலவர் அழகாகப் பாடினுர்.

விண்ணுக் கடங்காமல் வெற்புக் கடங்காமல்
மண்ணுக் கடங்காமல் வந்தாலும்—பெண்ணை
இடத்திலே வைத்த இறைவர் சடாம
குடத்திலே கங்கைஅடங் கும்.

மனமும் ஆகாச கங்கையைப் போன்றதுதான். அலை பாய்ந்து ஓடிச் சிதறிப் போகும் இயல்பை உடையது. அதை ஒரு முகமாக நிற்க வைக்கும் ஆற்றல் சிவபிரா னுக்கு இருக்கிறது. நில்லாத நீரைச் சடையின் மேல் நிற்பிக்கும் இறைவனே, நிலையாமல் ஓடி எதை எதையோ நினைக்கும் நெஞ்சை ஒருமுகப் படுத்தித் தன்னையே நினைந்து இன்புறச் செய்வான். இந்தக் கருத்தைத் திரு நாவுக்கரசர் சொல்கிறுர்.

நில்லாத நீர்சடைமேல் நிற்பித் தானை
நினையாஎன் நெஞ்சை நினைவித் தானைக்
கல்லா தனஎல்லாம் கற்பித் தானைக்
காணு தனஎல்லாம் காட்டி னுனை.

ஒன்றையே நினைக்கும் இயல்பு இல்லாத மனத்தை ஒரு முகப்படுத்தித் தன்னையே நினைக்கும்படி செய்த அருள், மோட்ச இன்பத்தைத் தந்ததற்குச் சமானமாகும். வீட்டைத் திறந்து வைத்து உள்ளே கொண்டு போய் உட் காரவைப்பதற்கும், "நீ உள்ளே போய் உட்கார் அப்பா" என்று சொல்லி அந்த வீட்டின் சாவியைக் கொடுப்பதற் கும் அதிக வேற்றுமை இல்லை. சாவியைப் பெற்றவன் மாளிகையைத் திறந்து உள்ளே புகுவதற்கு நெடுநேரம் ஆகாது.

கங்காதரன் இந்தச் சாவியைத் தருகிறுன். பகீரத னுக்கு உபயோகமாவதற்காகக் கங்கையை அடக்கினுன்

என்பது புராணம். பிறவிதோறும் மனத்தோடு போராடித் தவம் செய்யும் ஆன்மாவுக்கு அருள் செய்யும் பொருட்டு இறைவன் முந்துகிறான். பல காலம் பயின்று பயின்று மனம் ஒருமைப்படுகிறது; மனோலயம் உண்டாகிறது; பிறகு மனோ நாசமே ஏற்பட்டு விடுகிறது. இதற்குச் சிவபிரான், கங்காதரன் அருள் செய்கிறான்.

யாருக்கும் பயன்படாமல் இருந்த கங்கை இறைவனுடைய தொடர்பினால் மூவுலகுக்கும் பயன்படும் திரிபதகை ஆயிற்று. மனமும் தன்னால் ஒரு பயனும் இன்றிப் பிறவிதோறும் அலைக்கழித்து வந்து, இறைவன் திருவருளால் தூய்மை பெற்றுச் சாத்துவிக மனமாகித் தன்னைப் பெற்றவனுக்கு உறுதுணையாக நிற்கத் தொடங்குகிறது.



கங்கை புனித முடையது. எந்த அழுக்கையும் போக்குவது. பாவத்தையும் கழுவுவது. தண்மையானது. அதுவே கொதித்தது என்றால் அதைக் குளிர்விக்க வழி ஏது? "என்னைத் தாங்குவார் யார்?" என்று அகங்கரித்த போது அது அகங்காரத்தால் அழுக்காகி விட்டது. இறைவன் தன் சடையில் ஏற்று அதைப் புனிதமாக்கினான். புனிதமற்ற எல்லாவற்றையும் தூயனவாக்கும் கங்கை புனிதம் நீங்கின போது அதன் அழுக்கைப் போக்கிப் புனிதமாக்கினான் இறைவன். மற்றவர்கள் தம் தலையிற் கங்கை நீரை விட்டுக்கொண்டு தாம் புனிதம் அடைவார்கள். இறைவனோ அதற்குப் புனிதம் அருளினான். எதனாலும் தன் தூய்மை மாறாத சுத்த சுயஞ்சோதி அவன். கடல்நீரைத் தான் வாங்கி அதன் உவர்ப்பை மாற்றி நன்னீராக்கிப் பொழியும் மேகத்தைப் போலப் புனிதம் இழந்திருந்த கங்கையைத் தன் ஒரு சடையிலே ஏற்றருளிப் புனித மாக்கினான்.

நீர் குளிர்ச்சிக்கு அடையாளம். "அன்பென்னும் நீர்" என்பார்கள். அன்பையே ஈரம் என்றும் சொல்வார்கள். கங்கை நீருருவம் உடையது. அதற்கு இயற்கையாக ஈரம் இருக்க வேண்டும்; அன்பு இருக்க வேண்டும்; இரக்கம் இருக்க வேண்டும். பகீரதன் செய்த தவத்தை எண்ணினால் கல்லும் கரையும். அப்படி இருந்தும் கங்கை இரங்கவில்லை. அதனிடம் ஈரம் இல்லாமற் போயிற்று. அது புனிதம் நீங்கியது என்பதற்கு, "என்னை ஏற்பவர் யார்?" என்று கருணையின்றிக் கேட்ட கேள்வியே சான்று. கொதித்த வெந்நீரை இறக்கி வைத்தால் ஆறும். தண்ணீர் விட்டு வளாவினால் ஆறும். கங்கையின் அகங்காரம் இறைவனால் ஆறியது. அவன் கருணையே உருவானவன். ஏழைக்கு இரங்குபவன். அந்தக் கருணைக் கடலில், இரக்கம் இல்லாமல் இருந்த கங்கை புகுந்து தன் வெம்மை மாறியது. அதுவும் குளிர்ந்தது, புனிதம் அடைந்தது.

புரிசடைமேற் புனல் ஏற்ற புனிதன் தான்காண்

என்று அப்பர் பாடுகிறார். அவன் இயற்கையாகவே புனிதன்; அந்தப் புனிதத்தன்மை எல்லா அழுக்கையும் போக்க வல்லது. புனிதம் நீங்கியிருந்த கங்கையாகிய புனலைத் தன் புரிந்த சடையின்மேல் ஏற்று மீட்டும் புனிதமுடையதாக்கினான்.

நில்லாத நீரைச் சடையில் நிற்கச் செய்த கதை பல அற்புதமான கருத்துக்களை உள்ளடக்கிக் கொண்டிருக்கின்றது. கங்காதரன் மனத்தை யடக்கும் வழியைக் காட்டுவான், தூய்மையை அருளுவான் என்ற கருத்தை அந்தக் கதை காட்டுகிறது.

# இயற்கையான அன்பு

"எனக்குச் சம்பளம் போதாது. வருகிற சம்பளத்தைக் கொண்டு வாழ வகையில்லை. அதனால் யாரிடமாவது கடன் வாங்கித்தான் பிழைக்கவேண்டும். கடன் வாங்கினால் திருப்பிக் கொடுக்கவேண்டுமே; அதுதான் முடியாத காரியம். ஆகையால் கடனும் வாங்குவது இயலாது. யாரிடமாவது கெஞ்சிக் கேட்கலாம் என்றால் அதற்கு மானம் இடம் கொடுக்காது. இந்த நிலையில் அவரைச் சிநேகம் பிடித்தேன். நல்ல வேளையாக அவர் என்னைப் போலப் பரதேசியாக இல்லாமல் இறைவன் கொடுத்த வசதிகளோடு வாழ்கிறார். அவர் என்னிடம் அன்பு பூண்டார். நானும் அவரிடம் மிகுதியான நண்பு பூண்டிருக்கிறேன். எனக்கு என்ன துன்பம் வந்தாலும் அவர் மலைபோல் நின்று தாங்குவார்" என்று ஒரு நண்பரைப்பற்றி ஒருவர் சொல்கிறார்.

தம்முடைய குறைகளை நீக்கும் செல்வமும் வள்ளன்மையும் உடையவர் என்பதனால்தான் அந்தச் செல்வரிடம் இவருக்கு நட்பு உண்டாயிற்று. இன்ன லாபம் கிடைக்கும் என்று எதிர்பார்த்து வியாபாரம் செய்வதைப் போல, இந்த நட்பை மேற்கொண்டிருக்கிறார் இவர். இவர் கருதிய லாபம் அல்லது உதவி கிடைக்காவிட்டால் அந்த நட்பு ஆட்டம் கொடுத்துவிடும். "அவனிடம் பணம் இருந்தால் நமக்கு என்ன ஆயிற்று? அவன் பாட்டுக்கு அவன், நம் பாட்டுக்கு நாம் இருக்கிறோம். எச்சிற் கையால் காக்கை ஓட்டாத அந்த மனிதனைச் சுற்றித் திரிவதில் ஒரு பயனும் இல்லை" என்ற அறிவு இவருக்கு வந்து விடும்.

இவருக்கு அந்தச் செல்வர் மேல் இருந்தது அன்பா? அல்லது வியாபார நோக்கமா? வியாபாரி நேசம் எப்போதும் ஒரு நிலையிலே நில்லாது என்று சொல்லுவார் கள். இவருக்கு உள்ளது வியாபார நோக்கந்தான். ஆகை யால் இருவரிடையும் இருந்தது நட்பே அல்ல. உலகில் நண்பர்கள் என்று சொல்லிக் கொள்பவர்களுடைய உள்ளத்தைத் தொட்டு அறிய முடிந்தால் பல பேர்கள் இந்த வியாபார நேசமுடையவராகவே இருத்தலைத் தெளிய லாம். மிகமிகச் சிலரே உண்மையான நட்பைப் பூண்டவர் களாக இருப்பார்கள்.

கடவுளிடம் பக்தியுடையவர்களாக எத்தனையோ பேர் களை நாம் காணுகிறோம். அவர்கள் பக்திச் சிறப்பால் இறைவனிடம் சென்று உருகிப் பணிந்து வழிபடுகிறார்கள். "என் வேலை உயரவேண்டும் கடவுளே" என்று சிலர் வேண்டிக் கொள்கிறார்கள். "என் மகளுக்கு நல்ல மாப்பிள்ளை வரவேண்டும்" என்று வரம் கேட்கிறார்கள் சிலர். "என் நோயைப் போக்கவேண்டும்" என்று பிரார்த்தனை செய்பவர்கள் சிலர். இப்படியாக ஒவ்வொரு வரும் ஏதோ ஒரு வேண்டுகோளை முன்னிட்டுக் கொண்டு வழிபடுகிறதைப் பார்க்கிறோம். "எனக்கு இது கிடைத் தால் உனக்கு அபிடேகம் செய்கிறேன்; அர்ச்சனை செய் கிறேன்" என்று 'கமிஷன்' கொடுக்க முன் வரும் பக்தர் களும் இருக்கிறார்கள்.

இவை யெல்லாம் இயற்கையான பக்தி ஆவதில்லை. இவை அனைத்துமே வியாபார முறையில் அமைந்த பக்தி தான். ஒன்றை எதிர்பார்த்துச் செய்கிறதாக இருப்பதால் அதை வியாபார முறை என்று சொல்வது பிழையாகுமா?

பழைய காலத்தில் மின்சாரம் மிகுதியாக இல்லாத போது பெரிய உத்தியோகசாலையில் பங்கா போட்டிருப்

பார்கள். அதை இழுக்கத் தனியே ஒரு சேவகன் இருப்பான். அவன் பங்கா இழுத்துக் கொண்டே இருக்கும் போது அதிகாரி தூங்கிப் போகிறுரென்று வைத்துக் கொள்வோம். அது பங்கா இழுப்பவனுக்குத் தெரிந்தால் மேலே பங்காவை இழுக்கமாட்டான்; நிறுத்தி விடுவான். காரணம் என்ன? அவன் பங்கா இழுப்பது அதிகாரிக்குத் தெரியவேண்டும். அவன் வாங்கும் சம்பளம் அப்போது தான் கிடைக்கும். அதிகாரி தூங்கும்பொழுது அவன் இழுப்பதும் இழுக்காததும் எப்படித் தெரியும்? அதனுல் அப்போது அவன் இழுப்பதை நிறுத்துகிறுன். இது இயற்கையான அன்பினுல் செய்கிற காரியம் அன்று.

அப்படியானுல் இயற்கையான அன்பு எப்படி இருக்கும் என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா?

ஒரு குழந்தை நோய்வாய்ப் பட்டிருக்கிறது. அதன் தாய் அருகிலிருந்து கவனித்துக் கொண்டிருக்கிறுள். மெல்ல விசிறுகிறுள். குழந்தை தூங்கிப் போகிறது. ஆனுலும் அதன் உடம்பில் வேர்வை உண்டாகிறது. தாய், குழந்தை தூங்கிக் கொண்டிருந்தாலும் தான் விசிறுவதை நிறுத்துவதில்லை. குழந்தைக்குத் தான் விசிறுவது தெரியவேண்டும் என்று எண்ணியிருந்தால், தெரிந்து கொள்ள முடியாதபடி தூங்கும்போது விசிறமாட்டாள். ஆனுல் அவள் அதை நினைக்கவில்லை. அவளிடத்தில் உள்ள இயற்கையான அன்பு அவளைத் தூண்ட, அப்படிச் செய்கிறுள். மலருக்கு மணம் இயற்கையாக இருப்பதுபோலத் தாய்க்கு அன்பு இயற்கையாக இருக்கிறது.

உண்மையான பக்தி அல்லது இயல்பான பக்தியும் இப்படித்தான் எதையும் எதிர்பாராமல் நிற்கும். இறைவன் நம்முடைய பிறவியைப் போக்குவான் என்று நினைந்து செய்வதல்ல இது. பள்ளத்தில் தண்ணீர் பாய்வது போல

இறைவனிடம் அன்பு பாயும் இயல்புடைய உத்தம பக்தர்களைக் காண்பது அரிது.

காரைக்காலம்மையார் அத்தகைய அரிய பக்தர் வரிசையில் சேர்ந்தவர். அவர் எம்பெருமானிடத்தில் இன்னது வேண்டும் என்று கேட்பதை விரும்பாதவர். அப்படி ஓரிரண்டு தடவை எதையாவது கேட்டாலும் அதை வற்புறுத்துவதில்லை. இறைவனிடம் அன்பு செய்வதற்குப் பயன் ஒன்று உண்டு என்ற நினைப்பே இன்றி அன்பு செய்தார். அவர் சொல்வதைச் சிறிது கேட்கலாம்.



'சிவபெருமான் நம்முடைய பிறவி நோயைப் போக்கு வார்; காலம் வரும்போது அஞ்சேல் என்று அருள் செய் வார். இந்த உலகத்தில் வரும் துன்பங்களால் நலியாமல் காப்பாற்றுவார்' என்ற நம்பிக்கையோடு இறைவனிடம் அன்பு செய்பவர் பலர் உண்டு. எனக்கு அத்தகைய நினைவு வருவது இல்லை. எனக்கு இடரே இல்லை என்று சொல்ல இயலாது. இடர்களிடையேதான் வாழ்கின்றேன். அந்த இடர்களை எம்பெருமான் போக்கமாட்டான் என்று யாரேனும் சொன்னாலும் அவனிடம் எனக்கு உள்ள அன்பு மாறாது. என் இடரைக் களைய வேண்டாம்; "ஐயோ, இப்படியெல்லாம் இடர்ப்படுகின்றாளே!" என்ற இரக்கமாவது அவனுக்கு இருக்கலாம். அந்த இரக்கம்கூட அவனிடம் இல்லை என்று யாரேனும் சொல்லட்டும்; அல்லது உண்மையாகவே அவனுக்கு இரக்கம் இல்லாமலே போகட்டும். அதைப்பற்றி எனக்குக் கவலை இல்லை.

"நீ இப்படி இருந்து வாழ்வாயாக" என்று வழி காட்டுவது அவனுடைய திருவருள் என்று அன்பர்கள் சொல்கிறார்கள். அப்படி நான் செல்லும் நெறியை அவன் காட்டாவிட்டாலும் நான் அவனை விடப்போவது இல்லை.

இடர்களையா ரேனும் எமக்கு இரங்கா ரேனும்
படரும் நெறிபணியா ரேனும்....
அன்பு அறுது.



"அந்தப் பெருமானது கோலத்தைக் கண்டுமா நீ அவனிடம் அன்பு செய்கிறாய்? மற்றவர்கள் எல்லாம் அஞ்சும் கோலம் பூண்டவனாயிற்றே!" என்று சிலர் கேட்கலாம். எனக்கு இது நன்றாகத் தெரியும். அவன் திருமேனியில் எப்போதும் எலும்புகளை அணிந்துகொண்டிருப்பான். என்பு அருக் கோலத்து எம்மான் என்பது உண்மைதான். ஆனாலும் அவனுடைய உண்மை நிலையை மற்றவர்கள் அறிய மாட்டார்கள். முதலில் தோற்றும் எலும்பைக் கண்டு ஏமாந்து போகிறார்கள். சற்று நின்று நிதானித்து அன்பு வைத்துப் பார்த்தால் எம்மானுடைய உண்மை உருவம் புலப்படும். அவன் சுடர் உருவாக நிற்பவன் என்ற உண்மை தெளிவாகும். அதைக் காணப் பொறுமையும் கண்ணும் இருந்தால் முதலிலே பார்க்கிற எலும்பை அடியோடு மறந்து விடுவார்களே! அதுமட்டுமா? எம்பெருமான் நெருப்பில் அல்லவா ஆனந்த நடனம் இடுகிறான்? அவனை நெருப்புச் சுடுவதில்லை. நெருப்பைவிடப் பெரிய நெருப்பு அவன். அந்த நெருப்புக்கு இந்த நெருப்பு குளிர்ந்த நீர் போன்றது.



நம்முடைய கை சுடுகிறது. ஈரக் கையை உடையவன் தன் கையால் நம் கையைத் தொட்டால் அவன் கை குளிர்ச்சியாக நமக்குத் தெரிகிறது. நம் கை அவனுக்குச் சூடாக இருக்கிறது. ஆனால் சுரநோய் வந்த ஒருவனை நாம் தொட்டுப் பார்த்தால் அவன் உடம்பு நமக்குச் சுடுகிறது. அவனுக்கோ நம்கை குளிர்ச்சியாக இருக்கிறது. நம்கையில்

சூடு இருந்தாலும் சுரநோயுள்ளவனுடைய உடம்பில் மிகுதியான வெப்பம் இருக்கிறது. குறைந்த சூடுள்ள நம் கை அவனுக்குக் குளிர்ச்சியாக இருக்கிறது.

மிகமிகச் சூடுள்ள அக்கினி தன்னைவிடப் பெரிய அக்கினிக்கு முன் குளிர்கிறது. பெரிய அக்கினிக்கு இந்தச் சிறிய அக்கினி வெப்பமுள்ள பொருளாகாமல், தண்மையுள்ள பொருளாகி விடுகிறது.

சுடர் உருவத்தையுடைய சிவபிரானுக்கு எரியானது வெப்பத்தைத் தருவதில்லை. அவனுக்கு அது தண்ணீராக இருக்கிறது. அதனால் அதில் அவன் ஆடுகிறான். நெருப்பிலே குளிக்கிறான்.

அழுக்குகளையும் குப்பைகளையும் எரித்து விட்டுத் தன் தூய்மை கெடாமல் இருப்பது நெருப்பு. நீரால் தூய்மை அடையாததை நெருப்பால் தூயதாக்குவார்கள். அத்தகைய நெருப்பையும் சுட்டெரிக்கும் நெருப்பாகிய இறைவனிடம் எந்த அழுக்கு அண்ட முடியும்? மலம் என்றால் அழுக்கு என்று பொருள். உயிர்களுக்கு உள்ள அழுக்கையும் மலம் என்று சொல்வார்கள். அதுதான் பெரிய அழுக்கு. ஆணவம் என்ற அழுக்கை உடைமையால் உயிர்கள் பிறப்பையும் இறப்பையும் அடைகின்றன. இந்த ஆணவ அழுக்குப் போனால் இன்ப அநுபவம் உண்டாகும்.

**ஆணவ அழுக்கடையும் ஆவியை விளக்கிஅநு**
**பூதிஅடை வித்ததொரு பார்வைக்காரனும்**

என்பது அருணகிரி நாதர் வாக்கு.

இந்த மலத்தைப் பூதங்களில் ஒன்றாக இருக்கும் அக்கினியால் எரிக்க முடியாது. அதை அழிக்கும் பெருநெருப்பு இறைவன் ஒருவன்தான். அந்தப் பெரு நெருப்பாகிய இறைவன் சுடர் உருவை உடையவன். ஆதலால் இந்த

படி அமைத்தால் அந்தச் சந்தத்திலிருந்தே ஒருவகையான பொருள் தொனிக்கும். சொல்லப் பெறும் பொருளும் அதற்குரிய சந்தமும் கவியில் இணைந்துவிட்டால் அந்தக் கவி மிகமிக உயர்ந்ததாகிவிடும்.



சிதம்பரத்தில் நடராசப்பெருமான் ஆனந்த நர்த்தனம் செய்கிறார். அதைப் பாடப் புகுகிறார் குமரகுருபர சுவாமிகள். "அதோ இறைவன் ஆடுகிறான் பார்த்தீர்களா?" என்று காட்டுபவர் போன்று பாடுகிறார். நம்மை அழைத்துச் செல்கிறார், கறைக் கண்டன் ஆடும் திறத்தைக் காண்பதற்கு.

இறைவனுடைய நடனத்தைப் பார்ப்பதற்கு எத்தனையோ பேர்கள் கூடியிருக்கிறார்கள். அப்படி வந்திருப்பவர்களில் மிகமிகப் பெரியவர்களும் இருக்கிறார்கள். அவர்களையும் ஒருங்கே பார்க்கலாம் என்று வந்திருக்கிறார்கள் பலர்.

சாதாரண நாளில் கோயிலுக்குத் தரிசனம் செய்ய வருகிறவர்கள் ஒரு கணக்குக்குள்ளே அடங்கியிருப்பார்கள். யாராவது பெரிய தலைவரோ, மந்திரியோ தரிசனத்துக்கு வருகிறார்கள் என்றால் அன்று என்றும் காணாதபடி கூட்டம் வந்துவிடுகிறது.

இங்கே சிற்றம்பலத்திலும் அப்படித்தான் ஒரே கூட்டமாக இருக்கிறது. வந்திருக்கிறவர்கள் யார் யார் தெரியுமா? அதோ கையிலே பகைவர்களுக்கு யமனைகத் தோற்றுகிற சக்கரத்தை ஏந்திக்கொண்டு நிற்கிறார் திருமால். அருகில் பிரமதேவன் நிற்கிறான். ஆயிரங் கண்ணையுடைய இந்திரனும் பணிவோடு நிற்கிறான். இத்தனை பெரியவர்கள் வந்திருக்கிறபோது கூட்டத்துக்குக் கேட்க வேண்டுமா?

வெளியிலிருந்து போகிற நமக்கு முதலில் இந்தக் கூட்டந்தான் தெரிகிறது. பிறகு திருமால் முதலியவர்கள் தெரிகிறார்கள். வானுலகத்தை விட்டு இந்தத் தில்லை வனத்துக்கு வந்திருக்கிறார்கள் அவர்கள். கொழுந்தேன் பில்கி ஊற்றுப்போல வருகிற தில்லை வனம் இது. எங்கும் மலர்ச் சோலை நிரம்பியது. அந்தச் சோலைகளைப் பார்த்துத் தேனைக் குடிக்க வரவில்லை அவர்கள். அவர்கள் நேரே பொன்னம்பலத்துக்கு வந்திருக்கிறார்கள். பொன் பளபளக்கும் மன்றம் அது. அதனுடைய சோதி ஒரு பொன்னருவியே தன் அலைகளை வீசுவது போல ஒரு மயக்கத்தைத் தருகிறது.

இறைவனுடைய தரிசனத்தை மற்ற இடங்களிலும் பார்த்துக் கொள்ளலாம். தேவர்கள் திருக்கயிலாயத்திலே பார்க்கலாம். ஆனால் இங்கே காணும் அற்புத நடனக் காட்சி வேறு எங்கும் காணக் கிடைக்காதது.

இங்கே அப்படி என்ன காட்சி? குமரகுருபரர் கூட்டத்தை விலக்கிக் கொண்டு அந்த நடனத்தையே காட்டுகிறார்; நடன ஒலியையே கேட்கச் செய்துவிடுகிறார்.

முதலில் நிதானமாகத்தான் கூட்டத்தில் புகவேண்டியிருக்கிறது.

> கூற்றிருக்கும் அடல்ஆழிக் குரிசில்முத
> லோர்இறைஞ்சக் கொழுந்தேன் பில்கி
> ஊற்றிருக்கும் தில்லைவனத்து அசும்பிருக்கும்
> பசும்பொன்மன்றத்து—

[யமனுடைய இயல்பைக் கொண்டிருக்கும் வலிமையையுடைய சக்கரத்தைத் தரித்த திருமால் முதலியவர்கள் பணிந்து நிற்க, வளப்பமான தேன் வழிந்து ஊற்றெடுக்கும் தில்லை வனமாகிய சிதம்பரத்தில், துளிப்பது போன்ற காட்சியைத் தரும் பசும் பொன் வேய்ந்த மன்றத்தில்.]

மன்றத்தை அணுகிவிட்டோம். இதோ நடன ஒலி கேட்கிறது. இறைவன் ஒற்றைத் தாளை ஊன்றி நடன மாடுகிறான்.

குமரகுருபரர் பாட்டிலே நடன ஓசை கேட்கிறது. பொருளை அப்புறம் பார்க்கலாம். முதலில் நடனச் சந்தத்தைக் கேட்டுக் களிக்கலாம்.

பசும்பொன்மன்றத்து ஒருதாள் ஊன்றி,
வண்டுபா டச்சுடர் மகுடமா டப்பிறைத்
துண்டமா டப்புலித் தோலுமா டப்பசி
ரண்டமா டக்குலைந் தகிலமா டக்கருங்
கொண்டலோ டுங்குழற் கோதையோ டுங்கறைக்
கண்டனா டுந்திறங் காண்மினோ காண்மினோ!

நடராசப் பெருமான் ஆடும் ஆட்டத்தின் வேகம் பாட்டின் ஓசையிலேயே புலப்படுகிறது. அதை நாம் பார்க்க வேண்டும் என்பதில் குமரகுருபரருக்கு உள்ள ஆவல் வேகமும், "காண்மினோ. காண்மினோ!" என்பதில் தொனிக்கிறது. பாட்டைப் படிக்கும்போதே நடனத்தின் ஒலி கேட்கிறது.



வெறும் ஒலிமட்டுந்தான் இருக்கிறதா? இல்லை, இல்லை. பொருளுக்கும் குறைவு இல்லை. ஒருதாள் ஊன்றிக் கறைக்கண்டன் ஆடுந்திறத்தை மிக அழகாகப் பாடல் சொல்கிறது.

எம்பெருமான் அணிந்திருக்கும் மலர்மாலைகளில் தேன் உண்ணும் வண்டுகள் பாடுகின்றன. அவருடைய ஒளி மிக்க மகுடம் ஆடுகிறது. அதில் அணிந்திருக்கும் பிறைத் துண்டம் ஆடுகிறது. இடையிற் கட்டிய புலித்தோல் அசைந்து ஆடுகிறது. இந்த ஆட்டம் இறைவனிடம் மட்டுமா? அவன் ஆடுவதனால் பகிரண்டங்கள் அசைந்து

ஆடுகின்றன. அகிலம் யாவுமே ஆடுகின்றன. இறைவன் அருகில் உள்ள அம்பிகை ஆடுகிறாள்; மேகம் பார்த்தால், இதன் கருமை எங்கே, நாம் எங்கே என்று அஞ்சி ஓடிவிடும் அழகையுடைய கூந்தலைக்கொண்ட அந்தப் பெருமாட்டி ஆடுகிறாள். ஒரே இன்ப நடனமாகவே இருக்கிறது.

"இந்த ஆட்டத்தைப் பாருங்கள் ஐயா, பாருங்கள்" என்று அழைத்துக் காட்டுகிறார் முனிவர். பாட்டில் நடனக் காட்சி யிருப்பது பெரிதன்று; நடன ஓசையைத் தமிழ்ச் சொல்லமைப்புக் காட்டுகிறது.

கூற்றிருக்கும் அடலாழிக் குரிசில்முத
லோர்இறைஞ்சக் கொழுந்தேன் பில்கி
ஊற்றிருக்கும் தில்லைவனத்து அசும்பிருக்கும்
பசும்பொன்மன்றத்து ஒருதாள் ஊன்றி,
வண்டுபா டச்சுடர் மகுடமா டப்பிறைத்
துண்டமா டப்புலித் தோலுமா டப்பகி
ரண்டமா டக்குலந் தகிலமா டக்கருங்
கொண்டலோ டுங்குழற் கோதையோ டுங்கறைக்
கண்டனா டுந்திறங் காண்மினோ, காண்மினோ!

[கூற்று - யமனது தன்மை. அடல் - வலிமை. ஆழி - சக்கராயுதம். குரிசில் — திருமால். அசும்பு - துளி. பிறைத்துண்டம் - மூன்றாம் பிறைச் சந்திரன். அகிலம் - உலகம். கோதை - மாலை போன்ற சிவகாமசுந்தரி. கறைக்கண்டன் - நீலகண்டன். காண்மின் - பாருங்கள்.]

# நகை செய்யும் நங்கை

பெண்களுக்கு ஆடையிலும் அணியிலும் அளவற்ற ஆசை. கனந்தங்கிய பொருள்களைச் சுமக்க மாட்டாத மெல்லியலார் அவர்கள். ஆனால் பொன்னணிகள் எவ்வளவு கனமாக இருந்தாலும் தாங்குவார்கள். அந்தக் கனம் எதையோ சுமக்கிற மாதிரி இராது. பூப்போல இலேசாகவே இருக்கும். அதுமாத்திரமா? அவற்றைச் சுமப்பதில் இன்பம் கூடக் காணுவார்கள்.

ஒரே நகையைப் பல காலம் அணிந்திருப்பதில் அவர்களுக்கு விருப்பம் இருப்பதில்லை. அடிக்கடி மாற்ற வேண்டும்; அழித்து அழித்துச் செய்ய வேண்டும். இதனால் ஆகும் சேதாரத்தைப்பற்றி அவர்கள் கவலைப்படுவதில்லை. பொருளாதாரக் கண்கொண்டு பார்க்கிறவர்களுக்கல்லவா சேதாரக் கணக்கு வேண்டும்?

நகை பண்ணுவதில் அவர்களுக்கு உள்ள ஊக்கத்தை என்னவென்று சொல்வது! தட்டானுக்கு அருகில் தாமே இருந்து நகையைச் செய்விக்க ஆசைப்படுவார்கள். அதுவும் கிராமமாக இருந்து விட்டால் சொல்லவே வேண்டாம்; தட்டான் பட்டறையிலே படுகாடாகக் கிடப்பார்கள். நகை செய்யும் தட்டான் படும் சிரமத்தைவிட அவர்கள் படும் சிரமந்தான் அதிகமாக இருக்கும்.



இந்தக் காட்சியைக் குமரகுருபரமுனிவர் எங்கேயோ பார்த்திருக்கிறார். யாரோ ஒரு பெண்மணி தட்டான் பட்டறையில் கண்ணை விழித்துக் கொண்டு வேறு நினைவே

இல்லாமல் இருப்பதைப் பார்த்து வியப்படைந்திருக்கிறார். அந்தக் காட்சி அவர் நெஞ்சத்தில் படமாக அமைந்து விட்டது போலும்!

அவர் கவிஞர். வாழ்க்கையில் தம்முடைய உள்ளத்தில் பதிந்தவற்றைத் தாம் இயற்றும் கவியில் தக்க வண்ணம் கோத்துவிடுவது கவிஞர் இயல்பு. நகை செய்விக்கும் பெண்மணியின் படத்தைக் குமரகுருபரர் ஓரிடத்தில் காட்டுகிறார்.

அவர் பாடிய பாட்டுக்கள் யாவும் தெய்வத்தோடு தொடர்புடையவை. நீதியைச் சொல்லும் நீதி நெறி விளக்கமும், தம்முடைய ஆசிரியருடைய புகழைப் பாடிய பண்டார மும்மணிக்கோவையும் ஆகிய இரண்டு நூல் களைத் தவிர மற்ற எல்லாம் தெய்வங்களைப்பற்றியவையா கவே அவர் பாடியிருக்கிறார். அவருடைய உலக அநுபவங் களைக் கூடத் தெய்வ சம்பந்தமான பாடல்களிலே இணைத் துப் பாடி யிருக்கிறார்.

நகை பண்ணும் பெண்ணின் படத்தையும் வண்ணம் பூசி இறைவனுடைய உருவ வருணனையிலே இணைத்து விட்டார். தாம் கண்ட காட்சியை உபமானமாக வைத் துப் பொருத்தி விட்டார்.



திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்மேல் நான்மணிமாலை ஒன்றைக் குமரகுருபரர் பாடியிருக்கிறார். அதில் ஒரு பாட்டில் சிவபெருமானது திருமுடியின்மேல் ஒரு பொற்கொல்லனது பட்டறையையே அமைத்து விடுகிறார். அந்தப் பட்டறையில் நெருப்பு இருக்கிறது; கரி இருக்கிறது. தங்கம் இருக்கிறது; தட்டான் இருக் கிறான். ஆபரணம் செய்யச் சொல்லிக் காவல் காத்து உட்கார்ந்திருக்கும் பெண்ணும் இருக்கிறாள்.

பண்ணுகிறன்? இறைவன் திருமுடிப் பட்டறையில் ஒரு பெண் இருக்கிருள். கங்கை இல்லையா? அவளுக்காகத் தான் நகை தயாராகிறது!

"அதெல்லாம் சரி. நெருப்பிருக்கிறது, தங்கம் இருக்கிறது, நகைக்காக ஆசைப்படும் பெண்ணிருக்கிருள் என்றெல்லாம் சொன்னுரே; நகை செய்கிற தட்டான் எங்கே? அவன் இல்லாமல் இத்தனையையும் கொண்டு வந்து வைத்தால் அது பட்டறை ஆகுமா? நகைதான் செய்ய முடியுமா?" என்று அவசரப்பட்டுக் கேட்டுவிட்டீர்கள். இதோ தட்டானும் இருக்கிருன்.

அவன் வயசானவன். கூனல் விழுந்தவன். உடம்பு நரைத்துப் போயிற்று. அவன் முதுகைக் கூனிக்கொண்டு தங்கத்தை ஊதி நகை பண்ணுகிருன். இந்தத் துறையில் பலகாலம் பழகிக் கைராசியுள்ளவனைப் பார்த்துத்தான் அவனிடம் நகை செய்வார்கள். அந்தத் தட்டான் யார் தெரியுமா? இறைவன் சடை முடியில் இருக்கும் சந்திரன் தான். முழுச்சந்திரன் அல்ல; பிறைதானே? ஆதலால் அது வளைந்துதானே இருக்கும்? வெளுப்பு நிறமும் வளைவும் நரைத்துக் கூன் விழுந்த கிழவனை நினைப்பூட்டுகின்றன.

**கங்கைஅப் பொன்செய்விக்கும்**
**மின்ஓக்கும் பொன்செய் கிழக்கொல்லன்**
**ஒக்கும்அவ் வெண்பிறையே.**

பொன்னை நகையாகச் செய்கிற கிழட்டுத் தட்டானைக் கடைசியில் சொல்கிருர் குமரகுருபரர். இடத்தைக்காட்டின பிறகுதானே அதற்கு உடையவனைக் காட்டவேண்டும்?

இன்னும் தங்கம் தழலில் உருகியபடியே இருக்கிறது! நகை இன்னும் ஆன்பாடில்லை. அந்தப் பெண்ணும் பட்டறையை விட்டுப் போனபாடும் இல்லை!

தன்ஒக்கும் செல்வக் கமலைப்
பிரான்செஞ் சடாடவிமற்று
என்ஒக்கும் என்னின், எரிஒக்கும் ;
கொன்றை எரியில்இட்ட
பொன்ஒக்கும் ; வண்டு கரிஒக்கும் ;
கங்கைஅப் பொன்செய்விக்கும்
மின்ஒக்கும் ; பொன்செய் கிழக்கொல்லன்
ஒக்கும்அவ் வெண்பிறையே.

[கமலைப் பிரான் - திருவாரூர்ச் சிவபெருமான். செஞ்சடா டவி - செம்மையான சடையாகிய காடு. எரி - நெருப்பு. மின் — பெண். பொன் என்றது இங்கே ஆகுபெயராய்ப் பொன்னலான அணிகலன்களைக் குறித்தது.]

## 'விளக்கிட்டு இரு'

நகரங்களில் வீடு கிடைக்காமல் மக்கள் திண்டாடு கிருர்கள். புருக்கூட்டைப் போலச் சில இடங்களில் ஜனங்கள் அடைந்து கிடக்கிருர்கள். வீடு கிடைக்காத காரணத்தால் கல்யாணம் பண்ணியும் பிரமசாரியாக வாழ் கிறவர் சிலர். கிராமங்களிலிருந்து வரவர மக்கள் நகரத் துக்கு வந்து கொண்டே இருக்கிருர்கள். அதனுல் நகரத் தில் இட நெருக்கடி மிகுதியாகி வருகிறது. ஆனுல் கிரா மத்திலோ குட்டிச்சுவர்கள் அதிகமாகி வருகின்றன.

படித்தவர்கள் வெளியூர்களுக்கு உத்தியோகத்துக்குப் போய்விடுகிருர்கள். பணக்காரர்கள் நகர வாழ்க்கையில் மோகம் கொண்டு போய்விடுகிருர்கள். இதனுல் கிராமங் களில் வீடுகள் பல பூட்டிக் கிடக்கின்றன. யாராவது அந்த வீடுகளில் குடியிருக்கிறேன் என்று சொன்னுல் மேள தாளத்தோடு இருங்கள் என்று மகிழ்ச்சியோடு வரவேற் கிறவர்கள் இருக்கிருர்கள்.

"என்ன வாடகை கொடுக்கவேண்டும்?" என்று வந்தவர் கேட்கிருர்.

"ஏதோ உங்களுக்குத் தோன்றியதைக் கொடுங்கள். வீட்டில் விளக்கு வைத்துக் கொண்டிருந்தால் போதும்" என்று வீட்டுக்குடையவர் சொல்கிருர்.

பரம்பரையாக வாழ்ந்துவரும் வீடாதலால் அதில் இருள் படரும்படி மூடிவைக்க விரும்பமாட்டார்கள் சில செல்வர்கள். தாங்களும் குடியிருக்கமாட்டார்கள். அதனுல் யாராவது ஏழையைக் குடி வைத்து, "வீட்டைப் பெருக்கி

மெழுகு விளக்கு வைத்துக் கொண்டிருங்கள்" என்று சொல்லுவதும் உண்டு.



அப்படித்தான் ஒரு பக்தர் சொல்கிறார். ஒரு பெண் மணியைப் பார்த்துச் சொல்கிறார். அந்தப் பெண்மணியும் அவளுடைய கணவனும் காட்டிலே குடியிருந்தார்கள். வேறு குடும்பம் இல்லை. நாட்டிலே அவர்கள் குடியிருக்க வந்தால் சிறிய வீடு போதும்.

பக்தர் முன்னே சொன்ன செல்வரைப் போலச் சொல் கிறார். "காட்டில் வாழ்கிறவள் அம்மா நீ; நீயும் உன் புருஷனும் இரண்டு பேர்தாமே, இந்த வீடு போதுமே. இது இருள் மூடிக்கிடக்கிறது. ஏதோ விளக்கு வைத்துக் கொண்டு இரு அம்மா" என்று சொல்வது போலச் சொல் கிறார்.

> தருமே கடம்பவனத் தாயேநின் சிற்றில்
> அகமேஎன் நெஞ்சமது ஆனால்—மகிழ்நரொடும்
> வாழாநின் றாய்,இம் மனை இருள்மூ டிக்கிடப்பது;
> ஏழாய்! விளக்கிட் டிரு.



கடம்ப வனமாகிய மதுரையில் எழுந்தருளியிருக்கின்ற மீனாட்சியம்மையை நோக்கிச் சொன்னது இது. யாரோ ஏழைப் பெண்ணைப் பார்த்துச் சொன்னதுபோல முதலில் தோன்றுகிறது. ஊன்றிப் பார்த்தால் இந்தப் பக்தர் அம்பிகையைத் தம்முடைய நெஞ்சமாகிய திருக்கோயிலில் வந்து வீற்றிருக்கும்படி வேண்டிக் கொள்கிறார் என்பது தெரியும்.

"அம்மா! நான் சொல்லும் இது தக்க காரியந் தான். தகாதது ஒன்று நீ செய்யவேண்டுமென்று நான்

சொல்ல வரவில்லை. கடம்ப வனத்தில் எழுந்தருளி யிருக்கும் அன்னாய்! வேண்டாத எண்ணங்களெல்லாம் குடியிருக்கின்றன இந்த வீட்டில். என்னுடைய நெஞ்சமாகிய வீட்டைத்தான் சொல்கிறேன். பூச்சி, புழு, பாம்பு, தேள், பேய் எல்லாம் குடியிருக்கின்றன. அதற்குக் காரணம் இது யாரும் குடியிராமல் இருள் மூடிக்கிடக்கிறது. இந்த இருட்டில் யார் உள்ளே போவார்கள்? விளக்கையேற்றி வைத்து உள்ளே புகுந்து துப்புரவாக வைத்துக் கொள்ளும் ஆற்றல் மற்றவர்களுக் கெல்லாம் இல்லை. நீயேதான் இந்த இருள்மூடிக் கிடக்கும் மனையில் விளக்கை ஏற்றிக்கொண்டு இருக்க வேண்டும். எத்தனையோ தீய குணங்களாகிய புழுவும் பூச்சியும் தேளும் பாம்பும் வாழும் மனையாகி விட்டது என் நெஞ்சம். அறியாமை அல்லது அஞ்ஞானமாகிய இருள் மூடிக்கிடக் கிறது. இதில் ஞானமென்னும் விளக்கை ஏற்றி நீ வந்து எழுந்தருள வேண்டும்" என்று கெஞ்சிக் கேட்கிறார் பக்த ராகிய புலவர்.

"ஏழாய்!" என்பது முதலில் ஏழையே என்று விளிப்ப தாகத் தோன்றினாலும், ஊன்றிப் பார்த்தால் பெண்ணே என்னும் பொருளைத் தரும்படி அமைந்திருக்கிறது.

"இந்த இடம் போதாதே!" என்று சொன்னால் என்ன செய்வது? அதற்காகத்தான், "உனக்கு அதிகக் குடும்பம் இல்லையே! நீயும் உன் கணவரும் ஆகிய இரண்டுபேர் தாமே?" என்று சொல்வாரைப் போல, "மகிழ்நரொடும் வாழா நின்றாய்" என்றார்.

"கடம்பவனத் தாயே! என் நெஞ்சம் நின் சிற்றில் அகமே ஆனால் (அது) தகும்; மகிழ்நரொடும் (நீ) வாழாநின்றாய். இம்மனை இருள் மூடிக் கிடப்பது; ஏழாய்!

(இதில்) விளக்கிட்டு இரு" என்று குமரகுருபர முனிவர் பாடுகிறார்.

> தருமே கடம்பவனத் தாயே! நின் சிற்றில்
> அகமேஎன் நெஞ்சகமது ஆனால்—மகிழ்நரொடும்
> வாழா நின்றாய், இம் மனை இருள்மூ டிக்கிடப்பது;
> ஏழாய்! விளக்கிட்டு இரு.

[கடம்பவனம் - மதுரை. சிற்றில் அகம் - சிறிய வீடாகிய இருப்பிடம். நெஞ்சகமது சிற்றில் அகம் ஆனால் தரும். மகிழ்நர் - கணவர். ஏழாய் - பெண்ணே.]

மீனாட்சியம்மை இரட்டைமணிமாலை என்னும் பிரபந்தத்தில் உள்ள பாடல் இது.

# ஆண்ட வண்ணம்

"என்னை என் தாய், அபிராமியம்மை ஆட்கொண்ட கருணையை என்னவென்று சொல்வது! இதற்கு இணையான கருணை வேறு எந்தச் செயலிலும் இல்லை" என்றார் ஒரு பெரியவர். அவர் அம்பிகையின் திருவடிகளைத் தியானித்து ஞானம் பெற்றவர். தேவியின் தியானத்திலே நெடுநேரம் சடுபட்டுக் கம்பத்தைப்போல இருந்து விடுவார். அவருக்கு அபிராமிபட்டர் என்று பேர். சோழ நாட்டில் கால காலனுகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் தலமாகிய திருக்கடவூரில் வாழ்ந்தவர். அவரோடு சிறிது கற்பனையாகச் சம்பாஷணை செய்து பார்க்கலாம்.

"அம்பிகையின் கருணையை வியக்கிறீர்களே! உங்களை ஆட்கொண்டதைப் பெருங்கருணைச் செயல் என்று பாராட்டுகிறீர்கள். உங்களுடைய தகுதியை அறிந்து எம் பெருமாட்டி உங்களை ஆட்கொண்டாள். இதில் என்ன வியப்பு இருக்கிறது?"

"என் தகுதியா? என் இயல்பைச் சொன்னல் வெட்கக் கேடு. நான் மனித உருவத்தில் இருக்கிறேனேயன்றி விலங்கினமாக மதிப்பதற்குரியவன். நாயைப் போன்றவன்."

"என்ன அப்படிச் சொல்கிறீர்கள்? உங்களுடைய பக்தி மற்றவர்களுக்கு வருமா? நாயென்று சொல்லிக் கொள்கிறீர்களே; அது நியாயமா?"

"ஆம்; நாய் போன்றவன்தான். மனிதராகட்டும், மற்ற விலங்கினங்களாகட்டும், தான் உண்டதைக் கக்கினுல் மீண்டும் அதைத் தின்னுவதில்லை. ஆனல் நாயோ ஒரு முறை கக்கினதை மீண்டும் உண்ணும் இழிவான இயல்புடையது. நானும் அத்தகையவன்தான். அநுபவத்திலே

குற்றமென்றும் துன்பந் தருவதென்றும் தெரிந்து ஒரு கணம் ஒதுக்கினாலும் அடுத்த கணம் அந்தக் குற்றத்தையே செய்கிறேன். தெரியாமல் தவறு செய்தாலும் மன்னித்து விடலாம். இது தவறு என்று நிச்சயமாகத் தெரிந்தும் ஒன்றைச் செய்கிறேன். அது போன்ற காரியங்களால் அநுபவத்திலே துன்பத்தை அடைந்தாலும் மறுபடியும் அத்தகையவற்றையே செய்கிறேன். இது நாய்க் குணந்தானே?"

"உலகத்தில் பெரும்பாலானவர்கள் அப்படித்தானே இருக்கிறார்கள்?"

"மற்றவர்கள் அப்படி இருந்தால் என்ன? நான் நாய் போன்ற குணமுடையவனாக இருந்தும் என் அன்னை என்னை ஆண்டுகொண்டாள். என்னை ஒரு பொருளாக எண்ணினாள்."

"நீங்கள் அவளிடம் போய் அழுது அரற்றிப் புலம்பி யிருப்பீர்கள்."

"அதுதான் இல்லை. அம்பிகையிடம் பக்தி செய்ய வேண்டும் என்ற எண்ணமே எனக்கு உண்டாகவில்லை. அந்த எண்ணம் முதலில் உண்டானபிறகல்லவா நான் அன்னையை நாடிச் செல்லவேண்டும்? அப்பெருமாட்டியே என்னை நாடி வந்தாள். என்னை ஆட்கொள்ள வேண்டும் என்ற திருவுள்ளம் அவளுக்குத்தான் உண்டாயிற்று. அம்பிகைக்கு ஆளாகவேண்டும் என்ற எண்ணம் முதலில் எனக்கு உண்டாகவில்லை. அப்பெருமாட்டி நாயைப் போன்ற இழிந்த இயல்பையுடைய என்னை ஆள நயந்து தானே வந்தாள்."

"நீங்கள் அம்பிகையைத் தேடிச் செல்லாமல் இருக்கலாம். அம்மை உங்களிடம் வந்தும் இருக்கலாம். வந்து உங்களுடைய அன்பு நிலையைக் கண்டு ஆண்டருளியிருக்கலாம்."

"அன்பு நிலையா? என்னை ஆட்கொள்ள எண்ணியதா வது நடக்கக்கூடிய காரியம். பிறகு, என்னிடம் வந்து எனக் கிருந்த தடித்தனத்தைப் பார்த்தால், இவனிடம் ஏன் வந்தோம் என்று அடுத்த கணத்திலே போய்விடத்தான் தோன்றும்!"

"அப்படி இருந்தும் எதைக் கண்டு அம்பிகை உங்களை ஆட்கொண்டாள்?"

"அதை நினைக்க நினைக்கத்தான் வியப்பாக இருக் கிறது. நான் என்னுடைய காமக் குரோதாதி குற்றங்களை யெல்லாம் அறுத்துத் தியானம் செய்து அன்பு பூண்டு பக்குவத்தால் உயர்ந்து எம்பெருமாட்டியை அணுக வேண்டும். இதுதான் முறை; நியாயம். அம்பிகையின் அருளைப் பெற்ற பெரியவர்களெல்லாம் எவ்வளவோ காலமாகப் பல விரதங்களைக் காத்தும் பூசை புரிந்தும் தவஞ்செய்தும் அப்பிராட்டியின் திருவருள் நோக் கத்தை அடைந்தார்கள். இன்னும் எத்தனையோ பேர்கள் உடலை வாட்டி ஊனைக் குறைத்துத் துன்பங்களை வலிய ஏற்றுத் தவம் புரிந்து அம்மையின் அருளுக்காக ஏங்கி நின்றும் அவளுடைய கருணைப் பார்வையின் லேசத்தையும் பெறாமல் தவிக்கிறார்கள். அப்படி இருக்கத் தகுதி ஒன்றும் இல்லாத என்னை அன்னை ஆண்டுகொண்டாள். நான் தகுதி பெற முயலவே இல்லை. இன்ன தகுதி யுடையாருக்கு இன்ன பயன் உண்டு என்ற வரை யறை உண்டு. அம்பிகை அந்த வரையறையை நினைக்க வில்லை. இவன் நாய் போன்றவனாயிற்றே என்ப தையும் நினைக்கவில்லை. பலகாலம் தவமிருந்து வாடும் பலர் நம் அருளுக்காகக் காத்திருக்கிறார்களே என்ற நினைவும் தோன்றவில்லை. இதுவரை இப்படி ஒருவனை ஆட்கொள்ளவில்லையே என்ற எண்ணமும் தோன்ற வில்லை. என்னை ஆட்கொள்ளாமல் இருப்பதற்கு எத்

தனையோ காரணங்கள் இருந்தும் அவைகளெல்லாம் நினைவுக்கு வரவே இல்லை. நினைவு இல்லாமல் இருந்த சமயத்தில் அவள் என்னை ஆண்டுகொண்டாள். இப்படி ஆட்கொள்ளச் சொன்னவர் வேறு யாரும் இல்லை. அம்பிகையே நாயேனையும் ஒரு பொருளாக எண்ணி நயந்துவந்து நினைவின்றி ஆண்டுகொண்டாள்.''

''இவ்வளவு நினைத்து அம்பிகையின் கருணையைப் பாராட்டுகின்ற நீங்களா நாய் போன்றவர்கள்? பக்தி இல்லாதவர்கள்?''

''அம்மையின் திருவருளைப் பெறுவதற்கு முன் இருந்த நிலை அல்லவா இது? இப்போது நல்லறிவு பெற்றதனால் தான் என் தாய் செய்த எல்லையற்ற பேரருளை நினைந்து நினைந்து விம்மிதம் அடையமுடிகிறது.''

''எம்பெருமாட்டியின் பெருமையை முன்பும் அறிந்திருப்பீர்களே!''

''இல்லை. இப்போதான் அறிகிறேன். அவள் என்னை ஆட்கொண்டதற்கு முன் அவளைப் பற்றி நாலுபேர் நாலுவிதமாகச் சொல்லக் கேட்டிருக்கிறேன்; அவற்றால் நான் அறிந்தது ஒன்றும் இல்லை. புராணங்களைப் படித்தவர்களும் சாஸ்திரங்களைக் கற்றவர்களும் எவ்வளவோ சொன்னார்கள். அவற்றைக் கொஞ்சம் கேட்டிருக்கிறேன். ஆனால் நான் இப்போது அறிந்தபடி அவளை அவர்கள் அறிந்திருந்தார்களா என்பது சந்தேகம். பெரியவர்கள் சொல்வதற்கெல்லாம் மாறு பேசிக்கொண்டிருந்தவன் நான்; பேய் போன்றவன். என் அறிவு எதனையும் தவறாக உணர்வது. அதை எம்பெருமாட்டி மாற்றினாள். அவளை உள்ளவண்ணம் உணரும் உணர்வு தந்தாள். அவள் அருள்பெற்ற பின்பு தான் அவளை உள்ளவண்ணம் உணர முடிகிறது. என் தாயின் பெருமையை உணர்கிறேன்.''

"எளிய முறையில் வந்து அருளுவது அப்பெருமாட்டிக்கு வழக்கமாக இருக்கலாம்."

"அப்படிச் சொல்லமுடியாது. அவளை அரியவள் அரியவள் என்று கூறும் சாஸ்திரங்கள் இருக்கின்றன. தேவர்கள் அவளை இன்னும் உள்ளவண்ணம் கண்டறியவில்லை. யோகியர்கள் எல்லோருமே கண்டு கொண்டார்கள் என்றும் சொல்வதற்கில்லை. அவள் இமயமலையின் தவப் புதல்வி. இமயம் என்றாலே நம்மால் அடைய முடியாதது என்று நினைக்கிறோம். இமயத்தின் திருப்புதல்வி எவ்வளவு அருமைப்பாடுடையவளாக இருக்கவேண்டும்! அது மட்டுமா? வைகுண்ட நாதனாகிய திருமாலுக்கு அருமைத் தங்கச்சி என் அன்னை என்றால் எத்தனை அருமையானவள் என்பதைத் தெரிந்துகொள்ளலாம். எனக்குத் தாய் என்று நான் சொல்வதனால் என் இழிவுகொண்டு அன்னையின் பெருமையை அளவிடக்கூடாது. மலைமகள், செங்கண்மால் திருத்தங்கச்சி, என்னிடம் உள்ள கருணையினால், நாயைப் போலவும் பேயைப்போலவும் நான் இருத்தலை மறந்து, தன் பெருமையையும் என் தகுதியின்மையையும் நினைக்காமல் ஆண்டுகொண்டாள்; என்னை ஏற்றுக்கொண்டாள். அதனால் நான் அவளைத் தாயே என்று அழைக்கிறேன். அந்தப் பெருமாட்டியின் கருணைக்கு ஈடு ஏது?"



இப்படி அபிராமிபட்டர் பேசினாலும் பேசாவிட்டாலும், அவர் அபிராமி அந்தாதியில் பாடியிருக்கும் பாடல் இந்தப் பேச்சுக்குக் கருவாக நிற்கிறது.

**நாயேனையும் இங்கு ஒருபொருளாக நயந்துவந்து**
**நீயே நினைவு இன்றி ஆண்டுகொண்டாய்; நின்னை உள்ள வண்ணம்**
**பேயேன் அறியும் அறிவுதந் தாய்; என்ன பேறுபெற்றேன்!**
**தாயே! மலைமகளே! செங்கண் மால்திருத் தங்கச்சியே!**

# கலை மடந்தை

உயர்ந்த கலைஞனுடைய உள்ளம் தூய்மையானது; விருப்பு வெறுப்பு அற்றது. உலகில் நிகழும் நிகழ்ச்சிகளையும் காணும் பொருள்களையும் தன் மனத்தில் உள்ள விருப்பிலோ வெறுப்பிலோ ஒட்டிப் பார்த்தால் அவற்றின் உண்மை உருவம் புலப்படாது.

வெள்ளைச் சுவரில் வண்ணம் பூசினால் பூசின வண்ணத்தின் இயல்பு தெளிவாகப் புலப்படும். முன்பே ஒரு வண்ணத்தைப் பூசிய சுவரில் பின்னும் வேறு ஒரு வண்ணத்தைத் தீற்றினால், பின்னாலே பூசிய வண்ணம் தோன்றாது; முன்னும் பின்னும் பூசிய வண்ணங்களின் கலவையாகிய மற்றொரு வண்ணமே தோன்றும். வெள்ளை நிறச் சுவரிலே நீல வண்ணம் தீற்றினால் நீலமாகவே தெரியும். ஆனால் மஞ்சள் நிறச் சுவரில் நீலத்தைப் பூசினால் அது பச்சையாகத் தோன்றும்.

கலைஞனுடைய உள்ளம் வெண்மையான சுவரைப் போல நடு நிலையில் இருக்கவேண்டும். தான் உணர்பவற்றை அவற்றின் மயமாக நின்று உணரவேண்டுமேயன்றித் தன் மயமாக ஆக்கிக்கொண்டு உணர்வதில் கலைத் தன்மை குறைந்துவிடும்.



'கடவுள் தீயில் வெம்மையாக இருக்கிறான். நீரில் தண்மையாக இருக்கிறான். கரும்பில் சாறாக இருக்கிறான்,' என்று நூல்கள் கூறுவதைக் கேட்டிருக்கிறோம். 'பழத்தில் சாறாக இருக்கிறான்' என்றால் அது பொருத்தமாகத்

தோன்றுகிறது. நீரில் குளிர்ச்சியாக இருக்கிறான் என்பதையும் ஒப்புக்கொள்கிறோம்.

இப்படிச் சொல்வதையே மாற்றி, 'நீரில் இருக்கும் குளிர்ச்சியை உணரும்போது நான் கடவுளை உணர்கிறேன். பழத்தில் இருக்கும் சுவையை உணரும்போது நான் கடவுளை உணர்கிறேன்' என்று சொன்னால் அதுவும் விளங்குகிறது. ஆனால் பாரதியார்,

தீக்குள் விரலைவைத்தால் நந்தலாலா—உன்னைத்
தீண்டும் இன்பம் தோன்றுதடா நந்தலாலா!

என்று சொல்வதைக் கேட்டால் அது நமக்கு விளங்குவதில்லை. "அது எப்படி ஐயா? தீக்குள் விரலை வைத்தால் கொப்புளம் அல்லவா உண்டாகும்? கண்ணனை அந்த வேதனைக்குச் சமானமாகச் சொல்லக்கூடாதே!" என்று கேள்வி கேட்க முந்துகிறோம்.

பார்க்கும் மரங்களெல்லாம் நந்தலாலா—உன்
பச்சை நிறம் தோன்றுதடா நந்தலாலா

என்ற கண்ணியை நாம் நூற்றுக்கு நூறு சரியென்று ஒப்புக்கொள்கிறோம். அந்தக் கண்ணி வரும் பாட்டிலேயே அதே கவிஞர் அதே மன நிலையோடு,

தீக்குள் விரலைவைத்தால் நந்தலாலா—உன்னைத்
தீண்டுமின்பம் தோன்றுதடா நந்தலாலா

என்று சொல்வது மாத்திரம் நம் அறிவுக்குப் பொருத்தமாகத் தோன்றுவதில்லை. காரணம் என்ன?

நாம் மரங்களைப் பார்க்கும்போது கண்ணுக்குக் குளிர்ச்சியாகவும் பசுமையாகவும் இருக்கின்றன; கண்ணுக்கு இன்பத்தைத் தருகின்றன. இன்பத்தைத் தரும்

பொருள் கடவுள் என்ற நினைப்பு நம்மிடத்திலே இருக்கிறது. நம்முடைய நிலையிலிருந்தே கடவுளைப் பார்க்கிறோம். ஆதலால் நமக்கு இந்திரிய சுகத்தைத் தரும் பொருள் எதுவாக இருந்தாலும் சரி, கண்ணனுக்கு உபமானமாகச் சொன்னால், ஒப்புக்கொள்ள ஆயத்தமாக இருக்கிறோம். 'தீக்குள் விரலை வைத்தால் அந்தத் தீயானது சுடுகிறது. அதனால் விளைகிறது துன்பம். அந்தத் துன்ப உணர்ச்சியோடா கண்ணனைப் பிணைப்பது? எத்தனை அழகான கண்ணன்! எத்தனை இனிமையான கண்ணன்!' என்றெல்லாம் நம்முடைய சிந்தனை ஓடுகிறது. தீயைத் தொட்டுக் கொப்புளித்த அநுபவத்தை நினைந்து, அந்த நினைப்பின் அடிப்படையிலே இந்தச் சிந்தனை படர்கிறது.

'தீயில் வெம்மையாக இருப்பவன் கண்ணன்' என்றால் ஒப்புக்கொள்ளத் தோன்றுகிறது. அது ஏதோ ஒரு தத்துவத்தைச் சொல்கிறதென்று நம்புகிறோம். அதே கருத்தை, "தீக்குள் விரலை வைத்தால் வெம்மையை உணர்கிறோம்; அந்த வெம்மையாகிய கண்ணனை உணர்கிறோம்" என்று விவரித்துச் சொல்லும்போதுதான் நமக்கு மயக்கம் உண்டாகிறது. அங்கே 'நாம்' இருக்கிறோம். நம்மை மறந்து நின்றால் அதை அநுபவிக்கலாம். கலைஞன் ஒருவன்தான் தன்னை மறந்து பார்க்கிறவன்; உணர்கிறவன். தண்மையானாலும் சரி, வெம்மையானாலும் சரி, யாவும் ஒரு பெருஞ் சக்தியின் வெவ்வேறு கூறுபாடுகள் என்பதைத் தெரிந்து கொண்டவன் அவன். அவனுக்குக் கறுப்பும் ஒரு நிறம், அழகிய நிறம்; சிவப்பும் ஒரு நிறம், அழகிய நிறம். இனிப்பும் ஒரு சுவை, இனிய சுவை; கசப்பும் ஒரு சுவை; அதுவும் இனிய சுவையே.

இப்படித் தன் சொந்த உணர்ச்சியைக் கலக்காமல் தூயதாக இருக்கும் உள்ளத்துக்கு எதை உவமை

கூறலாம்? இயல்பாகவே வெள்ளையான ஒரு பொருள் இருந்தால் உவமை கூறலாம்.

கலைஞன் எத்தகைய நுட்பமான உணர்ச்சியாலும் உணரக்கூடியவன். வைரத்தின் கூறுகளை நிறுப்பதற்கு மிக மிக நுட்பமான தராசை ஆளுவார்கள். எல்லாவற்றையும் விட நுட்பமான தராசு போன்றது கலைஞன் உள்ளம்; மிக மிக மென்மையானது. வெண்ணிறமான பொருளைக் கலைஞன் உள்ளத்துக்கு உவமை சொல்லும்போது, மென்மையும் இருக்கும் பொருளாகத் தேர்ந்தெடுத்தால் மிகவும் பொருத்தமாக இருக்கும்.

கலைஞன் உள்ளத்தில் பரிவு இருக்கவேண்டும். பரிவு என்றது பற்று அன்று; விருப்பமும் அன்று. எதனையும் ஆர்வத்தோடு உணர முற்படும் இயல்பு அது. அதனதன் நிலையில் வைத்து உணர்வதில் அவனுக்கு ஊக்கம் இருக்க வேண்டும். இல்லையானால் அவனுக்குப் பொருளின் முழு இயல்பும் தெரியாது. இந்தப் பரிவு (sympathy) இருப்பதனால்தான் கலைஞன் எந்தப் பொருளையும் கண்டு இன்புறுகிறான். பற்றுக்கு அப்பாற் பட்ட அன்பு அது. எதிலும் ஒட்டிக்கொள்ளும் ஈரம் அல்லது தண்மை அது.

ஆகவே வெண்மை, மென்மை, தண்மை என்ற மூன்று இயல்பும் உடைய பொருள் ஒன்று இருந்தால் விருப்பு வெறுப்பற்ற தூய்மையும், நுட்பமும், பரிவும் உள்ள கலைஞனுடைய உள்ளத்துக்கு உவமை கூறலாம். இவ்வளவோடு, கலைஞனிடம் கலைப் பொருளைப் படைக்கும் ஆற்றலும் இருக்கவேண்டும். நடுநிலையும் நுட்பமும் பரிவும் இருந்தால் காணும் பொருளினிடம் உள்ள இன்பத்தை நுகரும் நிலை அவன்பால் உண்டாகிறது. கலைஞனுடைய பாதிப் பகுதிதான் அது. தான் உணர்வதோடு நின்றுவிட்டால் அவனைக் கலைஞனென்று சொல்லமாட்

டார்கள். தான் உணர்ந்ததைப் பிறரும் உணரும்படி செய்யவேண்டும். அதாவது கலைஞன் கலைப் பொருளைப் படைத்துப் பிறருக்கு இன்பத்தை ஊட்டவேண்டும். ஓரிடத்தில் உள்ள பொருள் மணந்தால் அந்த மணம் பிறரிடம் சென்று அவர்களுக்கு இன்பம் தருகிறது. அழகிய பொருள் ஓரிடத்தில் இருந்தால் அதன் அழகு கண்ணைப் பறிக்கிறது. மணமும் அழகும் உள்ள பொருளைக் கலைஞனுடைய படைப்புச் சக்திக்கு உவமையாக்கலாம்.

எல்லாவற்றையும் ஒருங்கே சேர்த்துப் பார்க்கலாம். வெண்மை, மென்மை, தண்மை, மணம், அழகு எல்லாம் பொருந்திய ஒரு பொருள் இருந்தால் அதனை நடுநிலை, நுட்பம், பரிவு, பிறர் உள்ளத்தைக் கவரும் படைப்பைப் படைக்கும் இயல்பு ஆகியவற்றைக் கொண்ட கலைஞன் உள்ளத்துக்கு உவமையாகக் கூறலாம்.

இத்தனை இயல்புகளையும் உடையது மலர்; வெள்ளைப் பூ. மல்லிகை, நந்தியா வட்டை முதலிய பூக்களில் மேலே சொன்ன ஐந்தும் இருக்கின்றன. உவமை சொல்லும் போது இருக்கிறவற்றில் உயர்ந்ததைச் சொல்வது வழக்கம். வெண்ணிறம் பெற்ற மலர்களுக்குள் சிறந்தது எது? வெண்டாமரைதான். அதைக் கலைஞனுடைய உள்ளத்துக்கு உவமையாகச் சொல்வது மிக மிகப் பொருத்தம்.

வெண்டாமரை போன்ற உள்ளத்தில் கலை இடம் பெறும். வெண்டாமரை என்ற உவமையைச் சொன்னால் ஐந்து வகையான இயல்புகளும் சேர்ந்த நிலையையே நினைக்கவேண்டும்.

கலைக்கெல்லாம் கடவுளாகக் கலைமகளை நாம் வணங்குகிறோம். கலைமகள் வெண்டாமரையில் வீற்றிருக்கிறாள். கலைஞன் உள்ளத்தில் எழுந்தருளியிருப்பது கலை; கலையையே கலைமகளாக நினைக்கிறோம். கலைஞன் உள்ளம்

வெண்டாமரை போன்றது என்பதை நன்ருகத் தெளிந்த பிறகு, வெண்டாமரையில் கலைமகள் வீற்றிருக்கிருள் என்று சொல்வதன் பொருத்தமும் தெளிவாகத் தெரிகிறது அல்லவா?



கலைஞர்களுக்குள்ளே சிறந்தவன் கவிஞன். அவனுடைய உள்ளத்திலே எப்போதும் கலைமகள் தாண்டவமாடுகிருள். அவனுடைய உள்ளத்தையே இனிய இசையை ஒலிக்கும் வண்டுகள் சூழ்ந்த வெண்டாமரையாக எண்ணி, அப் பெருமாட்டி எழுந்தருளுகிருள்.

சாமானிய மக்கள் உள்ளத்தில் கவிப் பெருக்கு உண்டாவதில்லை. கலைமகள் அங்கே அடியெடுத்து வைப்பதில்லை. அவர்களின் உள்ளங்கள் வெண்டாமரையாக இருப்பதில்லை. வன்மையான உள்ளங்கள் அவை. விருப்பு வெறுப்பினுல் மேடு பள்ளமான பாறைகள் அவை; தீய எண்ணங்களாகிய அழுக்கு ஏறிய இடங்கள். அங்கே கவி தோன்றுமா? கலை இருக்குமா?

கவிஞர் ஒருவர் இதைச் சொல்ல வருகிருர். அவர் மற்ற மக்களைக் கலையுணர்வில்லாதவர்கள் என்று சொல்லவில்லை. தம்மையே கலையுணர்வு புகாத வன்மனக் கருங்கல்லை உடையவராகச் சொல்லிக் கொள்கிருர்.

"என்னை அடிமையாக உடைய பிராட்டி, எல்லா உயிர்களுக்கும் இரங்கி அருள்பாலிக்கும் தாய், கலை மடந்தை; அந்தப் பிராட்டியினுடைய திருவடிகள் எவ்வளவு மென்மையானவை! தளிரைப் போன்றவையல்லவா அவை? அந்தத் தளிர் மெல்லிய வெண்டாமரை மலரிலே தங்கும் என்று சொல்லுகிருர்கள். அந்த மலரில் உள்ள மணம் பல வண்டுகளைத் தன்பால் இழுக்கிறது. அவை வந்து

இனிய இசையைப் பாடுகின்றன. 'தம்முடைய முரற்சியினால் இனிமையான வண்டுகள் சூழ்ந்த மெல்லிய வெண்டாமரை மலரிலே தங்கும் எம்பிராட்டியின் இணையடித் தளிர்கள், சிறிதும் மென்மையையே அறியாத என் மனத்திலே, பாறை போன்ற வலிய மனத்திலே வந்து தங்குமா?' என்று அவர் பாடுகிறார்.

என்னை உடையாள், கலைமடந்தை, எவ்வுயிர்க்கும்
அன்னை யுடைய அடித்தளிர்கள் - இன்அளிசூழ்
மென்மலர்க்கே தங்கும் எனஉரைப்பர்; மென்மையிலா
வன்மனத்தே தங்குமோ வந்து?

[உடையாள் - அடிமையாக உடையவள். அளி - வண்டு. மலர்க்கே - மலரிலேயே.]

இப்பாடல் தண்டியலங்காரத்தில் உள்ளது.

# புத்த ஞாயிறு

எங்கே பார்த்தாலும் ஒரே இருள். இன்னது சிறந்தது, இன்னது அல்லாதது என்ற வேறுபாடே தெரியாத மருள் மண்டிக்கிடந்தது. உயிர்கள் எல்லாம் உணர்வு பாழாகிக் கிடந்தன. உணர்வு இல்லாத உலகத்தில் உண்மை மனிதனைக் காண முடியுமா? நாலு கால் விலங்கோடே மனிதனும் இரண்டு கால் விலங்காக உலவினான். ஆடையாபரணம் புனைந்து சுவையுணவு உண்டு மொழி பேசி வாழ்ந்தான்; ஆனாலும் மனிதனை மனிதனாக்கும் அறிவு அவனிடம் மருந்துக்கும் இல்லையாயிற்று.

விலங்கினங்கள் ஒன்றோடு ஒன்று பகைத்துக் துகைத்துக் கொலை புரிவது இயல்பு. இந்தக் கொலையே நீதியாக நடப்பது காட்டு வாழ்க்கை. மனித சாதியும் ஒருவரை ஒருவர் நலிவுறுத்தும் செய்கையில் இன்பங் கண்டது. ஒவ்வொரு மனிதனுடைய உள்ளமும் கொந்தளிப்பு மிக்க பெருங் காடாக இருந்தது. காமம், கோபம், லோபம், மோகம், மதம், பகையுணர்வு என்ற ஆறு கொடிய விலங்கினங்கள் அந்தக் காட்டிலே குலவி ஊளையிட்டுக் குழப்பி வந்தன. அதன் விளைவாக மனிதனுடைய நினைப்பு, பேச்சு, செயல் அத்தனையிலும் விலங்கு மணம் வீசின. அயலானைக் கெடுக்கும் எண்ணம், பிறர் நெஞ்சைப் புண்படுத்தும் வெய்ய உரை, பிற உயிருக்குத் தீங்கை விளைவிக்கும் செயல் ஆகியவையே மனிதனுடைய வெளியீடாக இருந்தன. பிறருடைய நலத்தைப்பற்றி எண்ண அவனுக்கு உள்ளம் இல்லை. பிறர் உரையைக் கேட்க அவனுக்குக் காது இல்லை. பிறர் நலம் காண அவன் கண் சகிக்கவில்லை. பிறருக்கு இன் உரை கூற அவன் நா எழுவதில்லை.

இந்த நிலையில், உலகம் முழுவதும் பகை மண்டுவதன்றி அமைதிக்கு இடம் ஏது? அறியாமை இருள் படர்ந்து, தனக்கும் தெரியாமல், பிறர் கூறுவதைக் கேட்கவும் உணர்வின்றி, அடைத்துப் போன செவியோடு நடைப்பிணமாக வாழ்ந்தது உலகம்; வறண்டுபோன பாலை நிலம் போல, அன்பும் அறிவும் இன்றிப் பாழாய்ப் போயிற்று. அப்போது ஒரு கதிரவன் உதித்தான். அறியாமை இருளைப் போக்க அறிவுக் கதிரை விரித்தான். பகையுணர்ச்சியை நீக்கத் தயாமூல தருமத்தைப் பரப்பினான்.

உயிர்கள் எல்லாம் உணர்வுபாழ் ஆகிப்
பொருள்வழங்கு செவித்தொளை தூர்ந்தறிவு இழந்த
வறந்தலை உலகத்து அறம்பாடு சிறக்கச்
சுடர்வழக்கு அற்றுத் தடுமாறு காலைஓர்
இளவள ஞாயிறு தோன்றியது என்ன
நீயோ தோன்றினை! நின்அடி பணிந்தேன்!

(மணிமேகலை)

என்று அந்தக் கதிரவனைப் போற்றிப் பணிந்தனர் அறிவுடை மக்கள். இருளும் பனியும் நலியக் கூம்பிக் குமைந்து மலர்ச்சியின்றி நின்ற தாமரை, செங்கதிரோன் கதிரைக் கண்டு இதழ்க் கதவந் திறந்து மணம் விரித்துத் தேன் பிலிற்றுகிறது போல, அந்தச் சூரியனைக் கண்டு அன்புக்கும் அறிவுக்கும் ஏங்கிப்போன உள்ளங்கள் அலர்ந்தன. அவனை நாடி அவனுடைய தயா மூலதர்ம ஒளியிலே இன்பத் தேனைப் பிலிற்றின.

பிறருக்கு இரங்காமல் தன் நலமே பேணி வாழ்ந்த பிண உலகத்தில் தன் உயிரைப் பாதுகாவாமல், தனக்கென்று ஒன்றையும் எண்ணாமல், தனக்கென்று ஒன்றையும் உரையாமல், தனக்கென வாழாமல் அந்த ஞான சூரியன் உலகிடையே சோதி வீசி உலவினான்.

அவன் யார்? அவன்தான் புத்த பகவான்! 'மைத்து இருள் கூர்ந்த மனமாசு தீரத்' தோன்றிய புத்த ஞாயிறு. அவனை மணிமேகலை ஆசிரியர்,

**தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்**

என்றும்,

**தன்உயிர்க்கு இரங்கான் பிறஉயிர் ஓம்பும்**
**மன்உயிர் முதல்வன்**

என்றும் போற்றுகிறார்

ஒவ்வொரு கணமும், உலகில் உள்ள உயிர்கள் எல்லாம் பிற உயிருக்கு ஏதம் விளைக்காமல் இன்புற்று வாழ வேண்டுமென்ற தயா மூலதர்மத்தை அப் பிரான் உபதேசம் செய்தான். மனிதன் மாத்திரம் அன்று, விலங்கினங்களும் பகைத்திறங் கடிந்து வாழவேண்டுமென்று அறம் உரைத்தான் அருளாளன்.

**விலங்கும் தம்முள் வெரூஉப்பகை நீங்கி**
**உடங்குயிர் வாழ்கஎன்று உள்ளங் கசிந்துகத்**
**தொன்றுகா லத்து நின்றறம் உரைத்த, ஆதிமுதல்வன்**

என்று தமிழ் நூல் புத்த பகவானைப் போற்றுகிறது.



ஒரு நாள் புத்த தேவனிடம் ஒரு வியாபாரி வந்தான். உலக வாழ்வில் அறநெறியின்றி வாழும் மூர்க்கர்கள் நிறைந்த சூனியப் பிராந்தம் என்னும் இடத்திலிருந்து வந்தவன் அவன். உலகமெல்லாம் இன்ப வாழ்வு வாழ அறவாழி செலுத்தும் புத்த பகவான் பெருமையைக் கேள்வியுற்றுத் தானும் பௌத்த சங்கத்திலே சேரவேண்டும் என்ற ஆசையோடு வந்தான். அவனுடைய உள்ளத் துறவை உணர்ந்த போதிநாதன், அவனுக்குத் துறவு நிலை அருளிச் சங்கத்தில் சேர்த்துக்கொண்டான். புத்தனையும்,

சங்கத்தையும், தர்மத்தையும் வணங்கிச் சரண் புகுந்தான் அவ் வணிகன்.

சில காலம் கழிந்தது. வணிகன் நல்ல பக்குவத்தை அடைந்தான். அப்போது தன் நாட்டில் உள்ள மக்களை யும் நல்வழிப்படுத்தவேண்டும் என்ற கருணை அவன் உள்ளத்தே சுரந்தது. அந்த விருப்பத்தைப் புத்த பகவா னிடம் விண்ணப்பித்துக்கொண்டான்.

புத்த தேவன் புன்னகை பூத்தான். பிறரை நன் னெறிப்படுத்த எண்ணுபவன் தயையின் உருவமாக நிற்க வேண்டும். பகையும் ஹிம்ஸையும் அணுவளவும் புகாத உள்ளம் படைத்திருக்கவேண்டும். ஆகவே, அந்த இயல்புகளை அவன் கொண்டவனா என்று அறியும் பொருட்டு அந்த ஞானச் செம்மல் அவனிடம் சில கேள்வி களைக் கேட்கலானான்.

"அங்கே போய் யாருக்குத் தர்மோபதேசம் செய்யப் போகிறாய்?" என்று புத்த தேவன் வினவினான்.

"பெருமானே, முதலில் என் சுற்றத்தார்களுக்கு அறம் உரைத்து, அவர்களை நல்வழிப்படுத்த முயல்வேன்" என்றான் வணிகன்.

"அங்குள்ளார் யாவரும் கயவரென்றும், முரடரென் றும் சொல்லியிருக்கிறாயே. இப்போது உன்னைக் கண்டு அவர்கள் பரிகாசம் செய்யமாட்டார்களா? நீ பேசத் தொடங்குமுன் உன்னை நாக்கில் நரம்பின்றி வைவார்களே! அப்போது என்ன செய்வாய்?"

"தர்மத்தை வணங்கி, மௌனம் சாதிப்பேன். வைவாருக்கு எதிர் வைவதைச் செய்யேன்."

"அது சரி; அவர்கள் மேலும் உன்னை அடிப்பார் களானால் என்ன செய்வாய்?" என்று மீண்டும் கேட்டான் புத்தர் பிரான்.

"பெருமானே, சங்கத்தின் திருநாமத்தைத் தியானித்துச் சும்மா இருப்பேன். அடிப்பாருக்கெதிரே கை எடேன்."

புத்த தேவன் புன்னகை பூத்தான்.

"அதுவும் சரிதான். ஆனால் அவர்கள் உன்னைக் கொல்லத் துணிந்தால் என்ன செய்வாய்?" என்று கேட்டான் தயாநிதி.

"சாவுக்கு அஞ்சி வாழ்வை விரும்புபவன் அல்ல நான். தேவரீருடைய திரு நாமத்தை ஜபித்தபடியே வருவதை ஏற்பேன்" என்று கம்பீரமாக விடை பகர்ந்தான் வணிகன்.

"நல்லது! நீ எடுத்துக்கொண்ட காரியத்தில் வெற்றி அடைவாய். போய் வா" என்று அவனுக்கு விடை கொடுத்தருளினான் புத்த பகவான்.

கொலை செய்ய வருவானையும் முறுவல் முகத்துடன் நண்பு பாராட்டும் உள்ளம் படைத்தவன் எவனோ, அவனே தயை என்னும் பயிரை விளைவிக்கும் ஆற்றல் உடையவன். "தின்ன வரும்புலி தன்னையும் அன்பொடு சிந்தையிற் போற்றும்" திருவாளன் எவனோ, அவனே உலகத்தில் ஹிம்ஸையை நீக்கும் தொண்டிலே ஈடுபடுவதற்குரியவன். அத்தகைய தயா வீரர் கூட்டத்திலே ஓங்கி உயர்ந்து நிற்கிறவன் புத்தர் பிரான். அவனை நம் காலத்திலும் நினைக்கும்வண்ணம் செய்து, பகையிடையே அன்பையும், குருதி வெள்ளத்திடையே குழையும் அன்புக் கண்ணீரையும், போரிடையே அமைதியையும், வேற்றுமையிடையே ஒற்றுமையையும் நிலைநாட்ட வாழ்ந்தார் காந்தியடிகள்.